# இமயமலை குருநாதர் – ஒரு சித்திரம்!



ஆங்கில மூலம்: சுவாமி முருகானந்த சரஸ்வதி
தமிழாக்கம்: காந்தலக்ஷ்மி சந்திரமௌலி



வானதி பதிப்பகம்

# இமயமலை குருநாதர் - ஒரு சித்திரம்



ஆங்கில மூலம்:

**சுவாமி முருகானந்த சரஸ்வதி**

தமிழாக்கம்:

**காந்தலக்ஷ்மி சந்திரமௌலி**



**வானதி பதிப்பகம்**
23, தீனதயாளு தெரு,
தி.நகர், சென்னை—17.

முதற்பதிப்பு : ஜனவரி - 2013



திருநாவுக்கரசு தயாரிப்பு

**விலை : ரூ. 50-00**

- TITLE : IMAYAMALAI GURUNATHAR - ORU CHITHIRAM
- AUTHOR : SWAMI MURUGANANDA SARASWATHI
- TRANSLATOR : KANTHALAKSHMI CHANDRAMOULI
- LANGUAGE : TAMIL
- SUBJECT : SPIRITUALITY
- EDITION : FIRST EDITION, JANUARY - 2013
- PAGES : 80
- PUBLISHED BY : VANATHI PATHIPPAKAM
  23, Deenadayalu Street
  Thyagaraya Nagar
  Chennai - 600 017
  Phone : 24342810, 24310769
  Email:vanathipathippakam@gmail.com
- PRICE : ₹ 50-00

Typesetting : *AMARAVATHI GRAPHICS*
Chennai - 33.

Printed at : Ganapathi Process, Chennai-5.

இப்புத்தகம் ஸ்ரீ பி.ஜி. வெங்கடகிருஷ்ணன் அவர்களின் பேருதவியினால் (குரு கிருஷ்ணா - பூஜாரி - சிவாலயா) மற்றும் கிழக்காப்பிரிக்க கண்டத்தில் ரேய்லேண்ட்ஸ் - கேப் டவுனில் உள்ள மறைந்த தன் தந்தை ஸ்ரீ டி.கே. கோவிந்த ஐயர் அவர்களின் நினைவாஞ்சலியாக வெளியிடப்பட்டது.

சுவாமி சிவானந்தாஜியின் அருள் அனைவரும் பெறட்டும்.

அப்பேரருள் அனைவருக்கும் கிட்டட்டும்.

ஹரி ஓம்!

**A.M.RAJAGOPALAN,** B.A.,
Asthana Vidhwan, Srimadh Ahobila Mutt.,
Editor, "Kumudam Jothidam"
Director, The Astrological Research Centre
(Non-Commercial Research Organisation
Devoted to the service of suffering humanity)

---

உலகில் எத்தனையோ நாடுகள் இருப்பினும் இந்த பாரத தேசத்தை மட்டும் பாரதப் புண்ணிய பூமி என உலகம் போற்றி பூஜிக்கின்றது. இதற்குக் காரணம் தவத்திலும், ஒழுக்கத்திலும், தெய்வ பக்தியிலும், வேத தர்ம நெறியிலும் உயர்ந்த அருளாளர்கள் அவதரித்த, அவர்களது திருவடி ஸ்பரிசம் பெற்றுத் தூய்மையடைந்ததே காரணமாகும். உலகில் வேறு எந்த நாட்டிலும் அல்லது வேறு எந்த பகுதியிலும் ஸ்ரீ ஆதி சங்கரர், ஸ்ரீமத் ராமானுஜர், ஸ்ரீ மத்வர், ஸ்ரீ வேதவியாசர் போன்ற மகா புருஷர்கள் அவதரித்ததில்லை.

உலக சம்பந்தத்தினால், மக்கள் மனதில் பலவித சபலங்கள் ஏற்பட்டு அதனால் தவறிழைக்க வாய்ப்புகள் ஏற்படும்போது மக்களைத் திருத்தி நல்வழி காட்டுவதற்காகவே இம்மகான்கள் மக்களிடையே அவதரிக்கின்றனர்.

இத்தகைய தந்நிகரற்ற தவசிரேஷ்டர்களில் மக்கள் இதயத்தில் நீங்காது எழுந்தருளியிருக்கும் மகான் பூஜ்யஸ்ரீ சிவானந்தஸ்வாமிகள். பக்தர்களால் அன்புடன் சிவானந்த மகராஜ் என பூஜிக்கப்பட்ட இம்மகான் தனது அவதாரக் காலத்தில் பெரும் பகுதியை இமயத்தில் கங்கைக் கரையில் கழித்தார். இந்த மகானைத் தேடி மக்கள் சென்றதில் வியப்பில்லை.

மகான்களின் புனித வரலாற்றை நினைப்பதும் கேட்பதும் பிறருக்கு எடுத்துரைப்பதும் மகத்தான புண்ணிய பலனைத் தரும். பக்திக்கும் பாசத்திற்கும் உரிய சுவாமி முருகாநந்த சரஸ்வதி அவர்களது அரிய படைப்பான "Portrait of A Himalayan Guru" என்ற ஆங்கில நூலைத் திருமதி காந்தலக்ஷ்மி சந்திரமௌலி அவர்கள் தமிழறிந்த நல்லுலகம்

பயனடையவேண்டும் என்ற உயர்ந்த நோக்கத்துடன் ''இமயமலை குருநாதர் - ஒரு சித்திரம்'' என்ற தலைப்பில் மிகவும் அழகாக மொழி பெயர்த்துள்ளார்.

எனது அன்பிற்கும், மரியாதைக்கும், பாசத்திற்கும் உரிய ஹாஸ்ய எழுத்தாளர் பாக்கியம் ராமசாமி அவர்களின் சீரிய முயற்சியாலும் இந்த அரிய தமிழாக்கம் மக்களுக்குக் கிடைக்கிறது. பிரபல வார இதழான குமுதத்தில் அப்புசாமியும் சீதாபாட்டியும் என்ற கற்பனையான பாத்திரங்களை சிருஷ்டி செய்து அவர்களுக்கு சிரஞ்சீவி பட்டத்தையும் பெற்றுத் தந்துள்ள நகைச்சுவை பிரம்மா திரு. பாக்யம் ராமசாமி அவர்கள் தமிழ் மக்கட்கு ஆற்றிய சீரிய தொண்டுகளில் இதுவும் ஒன்று.

பூஜ்ய ஸ்ரீ சிவானந்த மகராஜ் அவர்களின் தெய்விகப் பெருமையை விளக்கும் இந்த அற்புத நூலை. தரத்தில் உயர்ந்த நூல்களை மட்டுமே வெளியிடுவது என்ற கொள்கையைக் கடைப்பிடித்து வரும் எனது மதிப்பிற்கும், மரியாதைக்குமுரிய வானதி திருநாவுக்கரசு அவர்களின் முயற்சியினால் **வானதி பதிப்பகம் சென்னை - 17** வெளியிடுவதை அறிந்து மகிழ்ச்சியும் பெருமையும் அடைகின்றேன். இத்தகைய தெய்விக நூல்களையே இன்றைய இளைஞர்கட்கும் பெண்மணிகளுக்கும் தேவையான ஒன்றாகும். அனைவரும் படித்துப் பயன்பெற வேண்டிய தெய்விக நூல் இது.

அன்பன்
*ஏ.எம். ராஜகோபாலன்*

---

# பதிப்புரை

மகான் ரிஷிகேசம் சிவானந்த சரஸ்வதியைப் பற்றிய அரிய தகவல்களைக் கொண்ட நூல் இது. சுவாமி முருகாநந்த சரஸ்வதி. ஆங்கிலத்தில் எழுதியதை பத்திரிகையாளர் காந்தலக்ஷ்மி சந்திரமௌலி அழகான தமிழில் மொழி பெயர்த்துத் தந்திருக்கிறார்கள்.

சுவாமிகள் நம்முடைய தமிழ்நாட்டுப் பத்தமடையில் பிறந்து, இமாலயத்தில் ஆசிரமம் நிறுவி, உலகளாவிய சீடர்களைப் பெற்ற பெருமகனார்.

சுவாமி தம்முடைய ரிஷிகேசம் ஆசிரமத்துக்குள் எல்லோரையும் அனுமதித்திருக்கிறார். 'குற்றவாளியைக்கூட என்னுடன் வைத்துக் கொள்ள வேண்டும். அது இந்த உலகிற்கு அளிக்கும் பேருதவியாகும்' என்பன போன்ற சிந்தனைகள் அவர் இந்த பூமியை நேசித்த தன்மையை உணர்த்தக் கூடியவை.

இவருடைய திருப்பணி தென் ஆப்பிரிக்காவிலும் மையம் கொண்டிருப்பது மிகவும் பெருமைக்குரிய விஷயம். சுவாமி சிவானந்தரின் உபதேசங்களை நன்கு உணர்ந்து அவருடைய சீடரான சுவாமி முருகாநந்த சரஸ்வதி வழங்கி யிருக்கும் இந்த உரைகளின் தொகுப்பு ஆன்மிக அன்பர்களுக்கு பெருவிருந்தாக அமையும் என நம்புகிறேன். சுவாமி கிருஷ்ணானந்தா, சுவாமி கோவிந்தானந்தா போன்றோர் தங்கள் குருநாதரான சுவாமி சிவானந்தாவிடம் எத்தகைய பக்தி பூண்டு ஒழுகினார்கள் என்பதைப் படிப்பதே ஆனந்த அனுபவம்.

எனது அன்பிற்கும், மரியாதைக்கும், பாசத்திற்கும் உரிய எழுத்தாளர் பாக்கியம் ராமசாமி அவர்களின் சீரிய முயற்சியா லும் இந்த அரிய தமிழாக்கம் மக்களுக்குக் கிடைக்கிறது.

இந்த நூலுக்கு வாழ்த்துரை நல்கியுள்ள பெரியவர் ஏ.எம்.ஆர். அவர்களுக்கும், தமிழாக்கம் செய்து தந்த காந்தலக்ஷ்மி சந்திரமௌலி அவர்களுக்கும் எங்களின் நன்றி.

*வானதி திருநாவுக்கரசு*

ஹரி ஓம்

# ஆங்கில நூலின் பதிப்புரை

கேப் டவுன் நகரில் சுவாமி முருகானந்தா அளித்துள்ள உரைகளைத் தொகுத்து வழங்குவதில் பெருமை கொள்கிறோம்.

19-ஆம் நூற்றாண்டின் முடிவில், ஸ்ரீதாகுர் மஹராஜ் அவர்களின் பூத உடல் இவ்வுலகை விட்டு நீங்கிய மறு வருடம் ஒரு புண்ணியத் துறவி பிறந்தார்.

20-ஆம் நூற்றாண்டு முழுவதும் இத்துறவி தொடர்ந்த ஆன்மீகப் பணியானது, 21-ஆம் நூற்றாண்டிலும் பரவுவது என்பது பாரத நாட்டின் ஆன்மீக சக்தியை, அதன் நீள் மீட்சியை, நிரந்தரத்தை எடுத்துக் கூறுகின்றது.

சுவாமிஜியின் உரையில் அவர் அளித்திருக்கும் பல விஷயங்கள் மூலம் துறவிகள் இப்பூமியில் எப்படி வாழ்ந்தார்கள் என்பதை நமக்கு எடுத்துக் காட்டுகின்றது இந்நூல்.

தன் குருதேவரின் வாழ்வில் நடந்தவற்றை உன்னிப்பாக கவனித்து, சுவாமிஜி எழுதியுள்ளார் என்றால் அவர் சுவாமி சிவானந்த மஹராஜ் அவர்களை, கங்கை - ஹிமாலய புத்திரர் என்று அழைக்கப்படும் குருநாதரை ஆழமாக அறிந்து, புரிந்திருந்தால் தான் இயலும்.

இப்புத்தகம், உண்மையான தேடல் உள்ளவர்களுக்கு பாரத மண்ணின் மைந்தரான மிகப் பெரிய துறவியான சுவாமி சிவானந்தாவை அறிய ஒரு மாபெரும் வாய்ப்பாகும் என்று கருதுகின்றோம்.

ஹரி ஓம்
அருணாசல உன்னதமலை
அறக்கட்டளை
திருவண்ணாமலை

# ஆழம்காண முடியாதவற்றை ஆழம் காண்பது...

ஒவ்வொரு நாட்டிற்கும் அதற்கென்று உரிய ஓர் நாட்டுப் பார்வை, குணம் உண்டு. இவ்வகையில் பாரத நாடு 'துறவறம்' எனும் விஷயத்தை மிக உயரிய சொத்தாகக் கருதுகின்றது.

சென்ற நூற்றாண்டில், அகண்ட, பரிபூர்ண ஆன்மீக சத்குரு ஸ்ரீசுவாமி சிவானந்த மஹராஜ் அவர்கள் ஆன்மீக உலகம் மற்றும் மதசார்பற்ற உலகின் முடி சூடா மன்னராகவும், மிகவும் நேர்மையான தபஸ்வியாகவும் இருந்தார். அதே சமயம் இறைவனோடு ஐக்கியமானவர்களின் சிறு குழந்தைத் தன்மையையும் கொண்டிருந்தார்.

போற்றத்தக்க சுவாமி வெங்கடேசானந்தாஜி அவர்கள் கேப்டவுன் ஆனந்த குடீர் ஆஸ்ரமத்தில் நடத்திய குருபூர்ணிமா மற்றும் ஆராதனா புண்ணியகாலத்தில் நான் கிழக்காப்பிரிக்க நாடுகளுக்கு சென்ற வருடம் சென்றிருந்தது என் பாக்கியமே.

அங்கு இரண்டு உரைகளாற்றினேன். அவ்வுரைகள் மூலம் ஹிமாலய நாட்டின் அதிசயத் துறவியான ஸ்ரீசிவானந்த சுவாமிஜியைப் பற்றிப் பேசியது, ஆழங்காண இயலாத இப் பெரிய மகானை அறிய நான் மேற்கொண்ட சிறு முயற்சிகளாகும்.

சுவாமி வெங்கடேசானந்தாஜி கூறியதுபோல, இப் புத்தகத்தின் வாசகர்கள், எப்படி குருநாதர் நம்மையெல்லாம் ஓர் சுத்தியலின் துணையின்றி மென்மையாக, இனிமையாக வெண்ணைக் கட்டியைக் கையாள்வது போல செதுக்கினார் என்பதைப் புரிந்து கொள்வார்கள் என்று எண்ணுகிறேன்.

யார் கையிலிருந்து சர்க்கரை அளிக்கப்பட்டாலும், அதன் இனிப்பு ஒன்றாகத்தான் இருக்கும். அதுபோல, யார்

*குருமஹராஜ் அவர்களைப் பற்றிப் பேசினாலும் அது அவருடைய பிரம்மாண்டத்தைக் குறைக்காது என்று எண்ணுகிறேன்.*

*அவருடைய இன்முகம் உங்கள் வாழ்வைப் புது உத்வேகத்துடன் மலரச் செய்யட்டும்; உங்களுடைய குறிக்கோள்களை நிறைவேற்றட்டும் எனும் பிரார்த்தனையுடன் என் உரையைத் துவக்குகிறேன்.*

*குருநாதரின் அருள் உங்களுக்குக் கிட்டட்டும்.*

*ஹரி ஓம்*

சுவாமி முருகாநந்த சரஸ்வதி

# மொழிபெயர்ப்பாளரின் பார்வையில்...

த்வமேவ மாதா, பிதா த்வமேவ,
த்வமேவ பந்து, ஸகா த்வமேவ...

என்று தன் குருவை சர்வமுமாக ஏற்று, நீதான் பார்த்துக் கொள்கிறாய் என்று குருவிடம் சரணடையும் பாதையை நான் சுவாமி முருகாநந்த சரஸ்வதி அவர்களின் ஆங்கிலப் புத்தகத்தில் படித்தேன்.

ஆனால் தமிழில் மொழி பெயர்க்கையில் அதைப் பரிபூரணமாக உணர்ந்தேன். எழுதி முடிப்பதற்குள் எத்தனை மெய்சிலிர்க்க வைக்கும் அனுபவங்கள்!

ஆறு வயதுச் சிறுமியாக ஒரு பெரிய கூட்டத்துடன் புது தில்லியிலிருந்து ஹரித்வார், ரிஷிகேசம் பயணித்து ஆஸ்ரமத்திற்கு சென்று ''அதோ பார், அவர்தான் ஸ்ரீ சிவானந்தா சுவாமிகள். நமஸ்காரம் செய்'' என்று அம்மா அதட்டியதும், பிரம்மாண்டமாக, சிரித்த முகத்துடன், காவி உடையில் காட்சியளித்த சுவாமிஜியை பார்த்த ஞாபகமும்... ஏதோ ஒரு புகைமூட்டத்தின் இடையில் 'பளீரென்று' வீசும் மதியைப் போன்று 'சட்' என்று ஞாபகம் வந்தது.

அன்று பெற்ற ஆசிதானா அவர் வழி வந்த சீடர் மூலம் மீண்டும் அவரை மனக்கண்ணால் தரிசிக்க வைத்தது?

'அலகிலா விளையாட்டுடையவன்' என்று இறைவனைக் குறிப்பிடுவது சரிதான்.

'லட்டு எப்படியிருக்கும்' என்று கேட்டால் 'இனிக்கும்' என்பேன். இனிப்பு எப்படியிருக்கும் என்று கேட்டால்...? அப்படி ஒரு சொல்ல இயலாத புத்துணர்ச்சி, மகிழ்ச்சி, அன்பு, கருணை என்று பல எண்ணங்கள் மனதை சூழ்ந்துள்ளன.

இத்தகைய வாய்ப்பு அளித்த குருதேவருக்கும், சுவாமி முருகாநன்த சரஸ்வதி அவர்களுக்கும் என் நமஸ்காரங்கள்.

இதை சிறந்ததொரு புத்தகமாக வெளியிட்டுள்ள வானதி பதிப்பக உரிமையாளர் திரு. வானதி திருநாவுக்கரசு ஐயா அவர்களுக்கும் நன்றிகள் பல.

*காந்தலக்ஷ்மி சந்திரமௌலி*

# பொருளடக்கம்

1. இமயமலை குருநாதர் - ஒரு சித்திரம் 13
2. ஜூலை - 2009 -ஒரு புண்ணிய ஆராதனை 41

# 1. இமயமலை குருநாதர் - ஒரு சித்திரம்

**2009** - குருபூர்ணிமா - புண்ணியநாள்.

'குரு' என்று கூறும் அந்த அடிப்படைத் தன்மையை வணங்கும் புண்ணியநாள் வியாசபூர்ணிமா, குருபூர்ணிமா என்று அழைக்கப்படுகின்றது.

அளவற்ற பிரபஞ்ச சக்தியை விளக்கேற்றி வெளிச்சத் திற்குக் கொண்டு வந்த பகவான் ஸ்ரீவேதவியாசரை பூஜிக்கும் நன்னாள்.

ஆன்மீகத் தேடல் கொண்ட நாமனைவரும் தேர்ந்தெடுத்த பாதையில், பல போராட்டங்களை எதிர்கொண்டு, நம்முடைய எளிமையான முறையில், நமக்கு ஏற்படும் பலதடைகளையும் மீறி நாம் அந்தப் பிரபஞ்ச சக்தியை, இறையாண்மையை உணர முற்படுகிறோம். அதற்கான நன்னாள்தான் ஸ்ரீவேதவியாசரின் பூஜைநாளான குருபூர்ணிமா.

எந்த இடத்தில் மிக உயர்ந்த ஞானம் கற்றுத் தரப்படுகின்றதோ, அந்த இடத்தை வியாஸ பீடம் என்று கூறுகின்றோம்.

எந்த இடத்தில் ஒரு மதிப்பீட்டைத் தவறான முறையில் மதிப்பிடாமல், சரியான மதிப்புடன் மதிப்பிடுவது என்பது கற்றுத்தரப்படுகிறதோ, அந்த இடம் வியாஸபீடமாக ஆகிவிடுகின்றது.

இந்த உலகில் இருக்கும் ஒவ்வொன்றும் வியாஸ உச்சிஷ்டம் என்று கூறப்படுகின்றது. அதாவது இவ்வுலகில் தோன்றும் ஒவ்வொரு எண்ணமும், அது வாழ்வின் எப்பிரிவை சார்ந்திருந்தாலும், எந்த யோசனையை முன் வைத்திருந்தாலும் சரி, விஞ்ஞானம், கலை சம்பந்தப்பட்டதாக இருந்தாலும், எத்தகைய புரிதலாக இருந்தாலும், எத்தகைய முதிர்ச்சியாக

இருந்தாலும் சரி, அதைப்பற்றி ஏற்கனவே கூறியுள்ள அதிசய குருநாதன் வியாசபகவான். அவரைத்தான் குருபூர்ணிமா நன்னாளில் நம் உணர்வுகள் முழுவதையும் கொட்டி வணங்கு கின்றோம்.

குருவை பூஜிப்பது என்பது எளிமையான 'நன்றி' என்று உங்கள் பள்ளி ஆசிரியர் உங்களைப் பரீட்சையில் வெற்றியடைய வைக்கக் கூறுவது போல அல்ல.

குரு என்பவர் ஓர் அடிப்படையான உண்மை. அவர் உங்களிடம் அடித்துப் பேசுபவர் அல்ல. அவர் உங்களுடனே நடந்து, நீங்கள் இருக்கும் நிலையிலிருந்து உங்களை உயர்த்தி, உங்கள் நம்பிக்கைகளை உடைக்காமல், அதைப் போற்றி உங்களை முழுமையாக ஆக்குபவர்.

அதனால்தான் நாம் குருவைப் போற்றுகிறோம்.

ஒரு ஆசிரியருக்கு உங்கள் அறிவாற்றலை ஒளிரச் செய்யும் தன்மை உண்டு. ஆனால் ஒரு குரு என்பவர் உங்கள் வெகுளித்தனத்தை அதனுடைய முழுத்தன்மையைப் பெறும்படி செய்கிறார். வெகுளித்தனம்தான் மிக முக்கியமான விஷயமாகும்.

இவ்வுலகைப் பற்றியும், இங்கு எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்றும் கற்றுக் கொடுத்த ஆசிரியருக்கு நாம் நன்றிக்கடன் பட்டிருக்கிறோம். ஆனால் ஒரு குருவுக்கு நாம் வாழ்நாள் முழுவதும் நன்றிக்கடன்பட்டிருக்கிறோம். ஏனெனில் அவர் இவ்வுலகைப்பற்றி உங்களுக்கு எதுவும் கற்றுத்தரவில்லை. ஆனால் உங்களைப் பற்றி அனைத்தும் கற்றுத்தந்து, இவ்வுலகில் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்றும் கற்றுத் தருகிறார்.

இவ்விரண்டிற்கும் நடுவே மிகப் பெரிய வித்தியாசம் உள்ளது. அதுதான் உலக சம்பந்தம் மற்றும் ஆன்மீக சம்பந்தமாகும்.

உலக சம்பந்த வாழ்க்கை முறையில் நமக்கென்ன விஷயங்கள் தேவை என்று நாமறிவோம். அறிவு மூலமாக

நமக்குக் கிடைத்த புத்திசாலித்தனத்தைக் கொண்டு நமது தினசரி வாழ்க்கையின் பணிகளை நடத்திக் கொள்ள நாமறிவோம். நாம் செய்யும் எந்த விஷயத்திலும் வெற்றி பெற வேண்டும் என எண்ணுகிறோம்.

ஆனால் வெற்றிகள் நமக்குத் திருப்தியை அளிப்ப தில்லை. மேலும் வேறு ஏதோ ஒன்று தேவைப்படுகின்றது.

அறிவாற்றல் நம்மை அனைத்துக் கேள்விகளுக்கும் பதிலளிக்க வைக்கின்றது. ஆனால் குரு என்பவர் உங்கள் பதில்களில் கேள்வி கேட்க வைக்கின்றார்.

ஒரு ஆசிரியர் உங்கள் அனைத்துக் கேள்விகளுக்கும் பதிலளிப்பார். உங்களுக்கு அந்தப் பதில்கள் திருப்தியளிக் கின்றன. நீங்கள் வெளி உலகில் அனைத்து சாதனைகளையும் நிகழ்த்தலாம் என்று கருதுகிறீர்கள்.

நீங்கள் விவாதிக்கும் ஒவ்வொரு விஷயத்தையும், அதன் காரணங்களையும், அதன் பார்வையையும், ஒரு குருவால் கேள்விகள் மூலம் தகர்த்தெறிய இயலும்.

உங்களுக்கு வெளியே உள்ளவற்றை நீங்கள் சம்மதிக்க வைக்க இயலாது. உங்கள் உள்ளே, உங்களை நீங்களே சம்மதிக்க வைத்துக் கொள்ள வேண்டும்.

உலகிலேயே மிகக் கடுமையான ஆன்மீகப் பயணம் என்பது உங்களுக்குள்ளேயே நீங்கள் நடத்தும் பயணம்தான். ஆனால் நாம் இதைச் செய்வதேயில்லை.

நம் கேள்விகளுக்கு நாமே விடையளித்துக் கொள்ளும் கலை நமக்குக் கைவரவில்லை. ஏனெனில் நமக்கு அனைத்து பதில்களும் தெரியும் எனும் எண்ணம் நம்மிடையே பிரதானமாக உள்ளது.

ஆம், உங்களுக்கு வெளியே உங்கள் கேள்விகளுக்கான பதில்கள் உண்டு. ஆனால் உங்களுக்குள்ளே அந்த பதில்கள் வரமாட்டா. ஏனெனில் உங்கள் ஆழ்மனதில் ஏற்படும் பட படப்பை முதலில் அடக்கினால்தான், அதுவும் உள்ளே வரும். வெளிஉலகில் ஏற்படும் எந்த விஷயத்தாலும் அப்படபடப்பை அடக்க இயலாது.

ஆதலால் ஆன்மீகப் பாதையில் தேடுதல் இருப்பவர்களுக்கு குரு என்பவர் மிக முக்கியமானவராக இருக்கின்றார். ஏனெனில் இப்பாதையில் எண்ணற்ற தடங்கல்கள் உள்ளன.

இவ்வுலகில் நாம் வாழ வேண்டியதை உறுதிப்படுத்த நமக்கு நாமே கூறிக்கொள்ளும் பல காரணங்களில் நம்மைச் சுற்றியுள்ள வெளிப்புற விஷயங்கள் நமக்கு அக்கணத்திற்கு ஒரு வெற்றி அல்லது சாதனை மூலமாக மகிழ்ச்சியை அளிக்கலாம் என்பதும் ஒன்று. ஆனால் அதற்கும் மேலாக ஆத்ம திருப்தி என்று ஒன்று உள்ளது. அது உங்களை உங்களுடன் முழுமையாக ஈடுபட வைக்கின்றது. ஆத்ம திருப்தி உங்களிடம் இருந்தால் உங்களுக்குள் ஒரு அமைதி, ஒரு சமாதானம் தோன்றி நீங்கள் அழகுள்ளவராகவும், அமைதியானவராகவும் மாறுகின்றீர்கள்.

ஆகையால்தான் நாம் இந்த பூமியில் வலம் வந்த ஒவ்வொரு குருநாதரின் உயர்ந்த வாழ்க்கை, உயர்வான குணங்கள், அவர்களுடைய உன்னதமான உரைகளை எண்ணி, எண்ணி மகிழ்கிறோம். இதற்கெல்லாம் மூல குருவாக பகவான் ஸ்ரீ வேத வியாஸர் உள்ளார்.

ஆன்மீகத் தேடுதல் உள்ள மனிதர்களுக்கு அந்நேரத்தில் அவர்களுக்கு உள்ள முதிர்ச்சிக்கு ஏற்ப ஒவ்வொரு குருவும் முக்கியமானவராகிறார்.

குருமார்கள் தம்மிடம் வரும் தேடுதல் உள்ளவர்களின் மன முதிர்ச்சியைப் பற்றி நன்கறிவர். ஏனெனில் மனமுதிர்ச்சி என்பதை அந்தப் புரிதலை ஒதுக்காமல், அதைப் புரிந்து கொள்ள முயன்றுதான் மேலேறவேண்டும்.

அது அடிமைத்தனமான புத்தி அல்ல. அது ஒவ்வொரு விஷயத்தையும் மீறித் தாண்டிச் செல்வதாகும். இந்தத் தாண்டுதலைப் பட்டியலிட்டு கல்லூரிகளில் கற்றுத்தர இயலாது.

இது ஓர் அதிர்வலையாகும். இதை குருநாதர் அளிக்கையில் அந்தச் சீடன் பற்றிக் கொள்ள வேண்டும். ஓர் ஆசிரியர் என்பவர் தன் மாணவனிடம் முழுகவனத்தையும், ஒழுங்குமுறையையும் எதிர்பார்க்கின்றார். ஆனால் குரு

என்பவர் எதையும் எதிர்பார்ப்பதில்லை. ஆனால் ஒரு குறிப்பிட்ட கணத்திற்காக என்றென்றும் காத்திருக்கிறார்.

ஒரு சீடன் என்பவன் குருநாதரிடம் இருந்து தொடர்ந்து வரும் அதிர்வலைகளில் ஒன்றை உணர்ந்து, அதைப் பற்றிக் கொண்டு, குருநாதருடன் பயணித்து, அவருடைய அனுபவங் களைப் பெறும் அக்கணத்திற்காகத்தான் குருநாதர் சதா காத்துக் கொண்டிருக்கின்றார்.

அதனால்தான் குருநாதரை நாம் முழுமையாக நேசிக்கின்றோம்.

நம்முடைய குருநாதருடன், நாம் ஒவ்வொரு கணமும், ஒவ்வொரு சிறு செயலைச் செய்யும் பொழுதும், தொடர்பு கொண்டிருந்தால், காலையிலிருந்து அதைத் தொடர்ந்து கொண்டேயிருந்தால் அந்த குரு சக்தி எளிமையாக நம்முள் புகுந்து நம்மை வழிநடத்தத் துவங்குகின்றது.

இத்தகைய ஒரு புண்ணிய தினமான குருபூர்ணிமா நாளில் நாம் நம் குருவுக்கு வந்தனம் செய்கிறோம். சுவாமி கிருஷ்ணானந்தாஜி அவர்கள் ''நம் குரு நமக்கு உணவு, வெண்ணெய், தேன், பால் போன்றவற்றை மட்டும் அளிக்க வில்லை. அவர் என்றென்றும் தெய்வீகத்தின் துணையோடு வாழவும் வழி வகுத்துள்ளார்'' என்று கூறுவார்.

தெய்வீகத்தைப் பற்றி நாம் நிறையப் பேசுவோம், ஏனெனில் அதைப்பற்றி நாம் நிறைய படித்து வைத்திருக் கிறோம். இறைவனைப் பற்றி நிறைய பேசுவோம். ஏனெனில் அவரை நாம் பார்த்ததில்லை. அவரைப் பார்த்ததில்லை என்பதால் நம் கற்பனையில் உள்ளவற்றை எல்லாம் இணைத்து இதுதான் கடவுள் என்றும் கூறத் துவங்குகின்றோம்.

இறைவன் என்பவன் என்ன செய்கிறான் என்பதை ஒரு குருநாதர் தன்னுடைய பேரமைதி மூலமாக வெளிப்படுத்த இயலும்.

இதைத்தான் பல உயர்ந்த குருமார்கள், பூஜ்யஸ்ரீ சுவாமி சிவானந்தாஜி மஹராஜின் நிழலில் அவர் முன்னிலையில் இருபது வருடங்களுக்கும் மேலாக வாழ்ந்தவர்கள் நமக்கு

எடுத்துக் கூறியுள்ளார்கள். இதை நாம் உன்னிப்பாகக் கேட்கும் பொழுது அவர்களிடமிருந்து நாம் கற்றுக் கொண்டிருந்தோம்.

அக்கணங்கள் சிலிர்ப்பூட்டுபவையாகும். நாங்கள் காது கொடுத்துக் கேட்போமே தவிர, அவர்களிடமிருந்த பக்தியை உணர இயலாமல் இருந்தோம். குரு மகராஜிடம் அவர்கள் பரிபூர்ண அன்பும் நம்பிக்கையும் வைத்திருந்தனர். அவர் களுடைய அனுபவங்கள் மூலம், அவர்கள் தங்களைச் செதுக்கி யிருந்ததை அவர்கள் எங்களிடம் தினசரி பேசுவதன் மூலமும், அவர்களோடு இணைந்து பணி செய்வதன் மூலமாகவும் நாங்கள் உணர்ந்தோம்.

இவர்கள் செய்யும் ஒவ்வொரு பணியிலும் பகவான் ஸ்ரீசிவானந்தாஜியின் மகிமை தெரிந்தது. இவற்றையெல்லாம் ஆஸ்மரத்தில் நேரில் பார்த்து உணர்ந்தோம்.

அந்த ஆஸ்ரமத்தில் சுவாமி வெங்கடேசானந்தாஜி, சிவப்ரேமானந்தாஜி, சுவாமி விஷ்ணு தேவானந்தாஜி, சுவாமி தயானந்தாஜி அல்லது நரசிம்முலுஜி என்ற குருமார்களின் பெருமையை நாங்கள் அனைவரும் உணர்ந்தோம்.

இவர்கள் அனைவரும் பூஜ்ய ஸ்ரீசுவாமி சிவானந்தாவின் ஏதாவது ஒருநிலை, அது மிகச் சிறியதாக இருந்தாலும் சரி - அதை வெளிப்படுத்தினார்கள்.

சுவாமிஜியின் முழுமையை ஆஸ்ரமத்தில் முற்றிலும் உணர்ந்தேன். இன்றும் கோடிக்கணக்கான பக்தர்கள் பூஜ்யஸ்ரீ சுவாமி சிவானந்தாவின் ஆசிகளை உணர்கின்றார்கள் என்று எண்ணும்பொழுது கண்கள் பனிக்கின்றன.

அதுதான் ஒரு குருநாதரின் அழகை உணரும் தருணம். அவர் தன்னை வலியுறுத்துபவரல்ல. அவர் எளிமையின் மறு உருவம். ஒருவர் எவ்வளவு உயரத்தில் இருக்கின்றாரோ, அத்தனை எளிமையாக அவர் மாறிவிடுகின்றார். அதே சமயம் பிரச்சனைக்கு உரியவராக இருக்கும் ஒருவர், அத்தனைக்கத்தனை குழப்பத்தை ஏற்படுத்துவார்.

இங்கு பயம் என்பதேயில்லை. ஏனெனில் முழுமையான சிறிதும் களங்கமற்ற தன்மை உள்ளது. சிறிதும் பயம் என்பது

இல்லாதவர்கள்தான் பரிபூரண முழுமையை அடைய இயலும். (நமக்குள் பயம் இருக்கும் பொழுது இது நடக்காது) பரிபூர்ண முழுமையை அடைகையில் ஆன்மீக வாழ்வை நன்றாக அறிய முடியும்.

ஆன்மீக வாழ்வு என்பது கொண்டாட்டமானது. அது ஒரு தெளிவான விளக்கம். அது மகிழ்ச்சி நிறைந்தது. அது கட்டுப் படுத்தப்படாத, எவ்வித எதிர்பார்ப்பும் இல்லாத அன்பு கொண்டதாகும்.

இந்தப் பணியை செய்தால்தான் உங்களுக்கு உணவு கிடைக்கும் எனும் அவதி இங்கு இல்லை. உங்கள் உணவு, தங்குமிடம், உங்கள் உடைகள் இவை நிச்சயமாக உங்களுக்குக் கிடைக்கும்.

இங்கு எல்லாமே நிச்சயமாக உங்களுக்கு அளிக்கப் படுகின்றது. அது நீங்கள் கொடுப்பதினால் அல்ல - நீங்கள் எப்படிப்பட்டவர் என்பதற்காக அளிக்கப்படுகிறது. அந்த அடையாளத்தைத்தான் குருதேவர் மெய்ப்பித்துக் காட்டி யுள்ளார்.

மிக, மிகச் சிறிய மனிதர்கள் - அவர்களுக்கு எழுத, படிக்கக்கூட தெரியாது - இப்படிப்பட்டவர்களுக்கு ஆஸ்ரமத் தில் மிக உயர்ந்த பதவியை அளித்துள்ளார். அதற்கான ஒரே காரணம், பிரபஞ்ச சக்தியிலிருந்து வந்துள்ள அந்த ஆன்மா விற்கு உரிய மதிப்பையும், அங்கீகரிப்பையும் அளிக்க வேண்டும். இப்படிப்பட்ட ஒரு திறனை ஊக்குவிக்கும் நிலை அங்கு வரும் ஒவ்வொருவருக்கும் கிட்டியதுண்டு.

இந்த ஆஸ்ரமத்தில் என்ன உள்ளது என்று தேடி வருபவர்கள் ஏராளம். அங்கு குரங்குகளும் உண்டு, துறவிகளும் ஏராளமாக உண்டு. அங்கு மூட்டைப்பூச்சிகளும் உண்டு, மோசடிக்காரர்களும் உண்டு. ஒன்றுக்கொன்று முரண்பாடான பலரை ஆஸ்ரமத்தில் காணலாம்.

சிலர் மிக உயர்ந்த ஆடைகளை அணிவர். ஒரு சிலர் உடையே அணியாமல் இருப்பர். ஒருசிலர் அரைகுறை ஆடைகளை அணிவர். சிலர் குழப்பத்துடன் இருப்பார்கள்.

வேறு சிலர்7 ஆஸ்ரம வாழ்க்கையுடன் ஒன்றறக் கலந்து, கரைந்து விடுவார்கள்.

சரிசெய்ய இயலாத கஷ்டங்கள் அனைத்தும் முழுமை யாகக் கலந்து, அதன் போக்கில் போய்க் கொண்டிருப்பதை ஆஸ்ரமத்தில் காணலாம்.

அதே சமயம் சுவாமிஜி 1960 - 1970களில் என்னென்ன புதுமைகள் இருந்தனவோ, அதைக் கொண்டு ஆஸ்ரமத்தை மிக நன்றாக நடத்தினார்.

அவர் ஒரு நிறுவனத்தின் மூத்த தலைமை அதிகாரி போன்று செயல்பட்டு ஆஸ்ரம நிர்வாகம் செய்தார் என்பதை அன்று அங்குள்ளவர்கள் கண்டு வியந்தனர்.

பல்வேறு தட்டச்சு இயந்திரங்கள் (Typewriters) அங்கிருந்தன. 35 தட்டச்சு இயந்திரங்கள் ஒரே சமயத்தில் உபயோகப்படுத்தப்படும் சப்தம் கேட்டு 'தியானம் செய்ய ஏது நேரம்?' என்று கேட்கத் தோன்றும்.

இப்பொழுது கணினிகள் உள்ளன. யாரும் 'டைப்' செய்வதைக் காணவும் கேட்கவும் முடியாது. ஆனால் அன்றைய கால கட்டத்தில் 'பட்-பட்...டப்...டப்' எனும் சப்தம் தொடர்ந்து கேட்டுக் கொண்டேயிருக்கும்.

நான் இந்த சப்தத்தை 70களிலும் - 80 களிலும் தொடர்ந்து கேட்டிருக்கிறேன். ஆனால் அத்தனை சப்தத்திலும் ஆன்மீக ஒளியுடன் கூடிய பெரும் மகிழ்ச்சியும், மிகுந்த மன திருப்தியும் அங்கிருந்ததை உணர முடிந்தது.

நாங்கள் எப்படிப் பணி புரிந்தோம் என்று எங்களுக்குத் தெரியாது. ஆனால் நாங்கள் எந்த பணியை செய்தாலும் அதில் ஒரு முழுமை இருந்தது என்றுணர்ந்தோம். ஏனெனில் அந்தப் பணியை முழுமையாக செய்து முடித்தது அங்குள்ள தெய்வீகத் தன்மைதான் என்பதை நிச்சயமாக உணர முடிந்தது. ஒவ்வொரு பணியும் மிக அழகாகவும், ஆச்சரியகரமாகவும் பூஜ்யஸ்ரீ சுவாமி சிவானந்தாஜி மஹராஜ் மூலமாக கண்களுக்குப் புலப்படாத தெய்வீகத் தன்மையுடன் முடிக்கப்பட்டது.

நம்மில் பலருக்கு அந்த பிரம்மாண்டமான தெய்வீகத் தன்மை கொண்ட புருஷரின் அருகாமையில் வாழ இயலாமல் போயிருக்கலாம். ஆனால் அவரை தூரத்திலிருந்து நாம் பார்த்திருப்போம்.

அவருடைய உயர்ந்த தெய்வீகத்தன்மையைப் பற்றிக் கேள்விப்பட்டிருப்போம். ஆனால் அவருடைய அருகாமையில் ஓர் அருமையான தாத்தாவிடம் இருப்பது போன்ற உணர்வு ஏற்படும்.

உங்கள் தந்தையை விட, உங்கள் தாத்தாவுடன் வாழ்வது மிக சுலபம். தாத்தா பாட்டிகளும், பேரக் குழந்தைகளும், மிகுந்த ஒற்றுமையுடன் காணப்படுவார்கள். உங்கள் அம்மா அப்பாவை விட தாத்தா பாட்டியுடன் வாழ்வது சுலபம். ஏனெனில் அவர்கள் இருவருக்கும் இருப்பது ஒரே பொது எதிரி தானே! (மகன் அப்பாவாக மாறும் நேரம்).

இந்த ஆஸ்ரமம், கடவுள் இருக்கின்றார் எனும் நம்பிக்கையில்லாதவர்களுக்கு ஒரு சக்தி மிகுந்த அனுபவத்தை அளித்திருக்கின்றது. அதே சமயம் கடவுள் இருக்கிறார் என்பவருக்கு மிகுந்த பலம் பொருந்திய சக்தியை அளித்திருக்கின்றது.

இந்தக் காரணத்தினால் ஆஸ்ரமத்தில் பல்வேறு விதமான நடவடிக்கைகளை மேற்கொள்பவர்கள் ஒரே கூரையின் கீழ் பணிபுரிந்து வந்தனர்.

நாங்கள் வேத நூல்களை எப்பொழுதாவது படித்தோம். எதையும் ஒரு அட்டவணையின் கீழ், கட்டுப்பாடாகப் படித்ததில்லை. ஆனால் மற்றவர்களின் மனதை நன்கு படிக்கக் கற்றுக் கொண்டோம்.

சுவாமி சிவானந்தா மஹராஜ் அவர்கள் எழுதிய 350 புத்தகங்களிலும் ''இறைவனை உணர்வது தான் வாழ்க்கையின் ஒரே குறிக்கோள்'' என்று எழுதியுள்ளார்.

இந்த விஷயத்தை ஒவ்வொரு 'பாரா' என்று கூறப்படும் பகுதியிலும் அவர் மிக அழுத்தமாக வலியுறுத்தியுள்ளார். அவர் ஆழ்ந்த நிலையிலும், கற்பிக்கும் வழிமுறைகளின் ஆராய்ச்சி

முறையிலும், பிரார்த்தனைக் களமாக இருந்தாலும், ஜபம் செய்யும் முறையிலும், நாம ஜபம் எழுதும் முறையிலும் இதைத் தொடர்ந்து வலியுறுத்தியுள்ளார்.

அதே சமயம் மக்கள் 24 மணி நேரத்திலும் வாரத்தின் 7 நாட்களிலும், கண்களை மூடி உட்கார்ந்து கொண்டு, எப்பொழுது பார்த்தாலும் தியானம் அல்லது ஜபம் செய்யும் படி கூறியதில்லை.

யாராவது பட்டினி கிடந்தாலோ, எப்பொழுது பார்த்தாலும் தியானம் செய்து கொண்டிருந்தாலோ அவர் உடனே 'நீங்கள் ஆஸ்ரமத்தில் இருக்க லாயக்கற்றவர்கள்' என்று கூறுவார். மிகுந்த மகிழ்ச்சியுடனும், குறும்புத் தனத்துடனும் இருக்கும்படி கூறுவார். யாராவது தொடர்ந்து 'தட்டச்சு' இயந்திரத்திற்கு முன்னால் அமர்ந்து தொடர்ந்து 'டைப்' அடித்துக் கொண்டிருந்தால் ''நீ இந்த ஆஸ்ரமத்தில் இருக்க லாயக்கற்றவன்' என்று கூறிவிடுவார்.

எதையும் மிக அதிகமாகச் செய்வதை அவர் விரும்பிய தில்லை.

நீங்கள் பலம் பொருந்திய ஒரு நடுநிலையைக் கொண்டு, எதிரும் புதிருமாக இருக்கும் ஒரு விஷயத்தைக் கையாளும் திறன் பெற்றால் ஆஸ்ரமத்தில் வாழ அழைக்கப்படுவீர்கள்.

நீங்கள் விளையாட்டுத்தனம் கொண்ட குறும்புக்காரராக இருக்கலாம். ஆனால் உங்கள் பணியைச் செய்யும் பொழுது நீங்கள் முனைப்புடன் இருக்க வேண்டும். நீங்கள் செய்யும் எந்தப் பணியிலும் சரி, உங்கள் புரிதலை, உங்கள் செயல் பாட்டுடன் இணைத்து, அது தெய்வத்திற்கு அர்ப்பணம் செய்யப்படும் பணி என்று புரிந்து செயல்பட்டால், உலகப் பொது நன்மைக்காகச் செய்யும் செயல் என்று புரிந்து கொண்டால், நீங்கள் ஆஸ்ரம வாழ்க்கைக்கு வந்த காரணம் சரியானதாக இருக்கும்.

இந்த அடிப்படை கற்பித்தலைத்தான் சுவாமிஜி ஆஸ்ரமத்தில் கண்ணுக்குப் புலப்படாத, பூடகமான முறையில் தன்னுடைய போதனைகள் மூலம் நிரூபித்தார்.

ஆஸ்ரமத்தில் உள்ள மருத்துவசாலையில் ஒரு பிரம்மசாரி வயதானவர் ஒருவருக்கு கட்டுப் போட்டுக் கொண்டிருந்தார். பொதுவாக ஆஸ்ரமத்தில் மருத்துவ சாலைகளும், புத்தகக் கடைகளும் தேவையில்லை, ஏனெனில் அவற்றிற்கு அங்கு வேலையில்லை. ஆனால் சுவாமி சிவானந்தாஜி ஒவ்வொரு விஷயத்திலும் மனிதத்திறனை அதனுடைய முழுமையுடன் காண விரும்பினார். அங்கு வந்த ஒவ்வொருவருக்கும் அதற்கான சந்தர்ப்பத்தை அளித்து, இறைவனை உணரும் தன்மையை அதிகப்படுத்தினார். அதனால் ராம் ஆஸ்ரமம் அருகில் ஆனந்த குடீரில் ஒரு அழகிய மருத்துவ முகாம் தொடங்கப்பட்டது.

அங்கு அந்த பிரம்மசாரி ஒரு 90 வயது கிழவருக்குக் கட்டுப் போடுகையில் குருஜி அங்கு வந்தார். ''என்ன செய்து கொண்டிருக்கிறாய்?'' என்று அவர் கேட்க அந்த பிரம்மசாரி குருஜியின் கால்களில் பணிந்து, தான் என்ன செய்து கொண்டிருக்கிறோம் என்பதைக் கூறினார்.

பூஜ்யஸ்ரீ சுவாமி சிவானந்தா அவர்கள் 'யார் யாருக்கு கட்டுப் போடுவது?' என்று ஒரே ஒரு கேள்வியைக் கேட்டுவிட்டுச் சென்று விட்டார்.

ஒரு மிகச் சாதாரணமான கேள்வியாக உங்களுக்குத் தோன்றலாம். ஆனால் அதில் ஒரு ஆழமான பரந்த வேதாந்த தத்துவம் உள்ளது.

நாம் யாருக்காவது உதவி செய்யத் துவங்கினால் அல்லது யாருக்காவது சேவை செய்தால் நாம் அவர்களுக்கு உதவுவதாக நினைக்கின்றோம். ஆனால் சேவை செய்வதற்காகவும், அதன் மூலம் இறைவனை உணரவும் நமக்கு ஒரு சந்தர்ப்பம் அளிக்கப் பட்டுள்ளது என்பதை மறந்து விடுகிறோம். இதற்காக நாம் நன்றியுணர்வுடன் இருக்க வேண்டும் என்பதனை மறந்து விடுகின்றோம்.

ஒரு மருத்துவர் நோயாளிக்கு மருத்துவம் பார்ப்பதினால் அந்த நோயாளிக்கு ஆரோக்கியம் அளிப்பதில்லை. நீங்கள் ஒரு மருத்துவரிடம் செல்கையில் அவர் மருந்துகள் எழுதப்பட்ட

ஓர் சீட்டைத் தருகின்றார். நாம் மருந்துகளை வாங்கி விடுகின்றோம். அந்த மருத்துவர் மிகப்பெரிய ஆள் எனும் எண்ணத்துடன் சென்று விடுகின்றோம்.

ஆனால் அந்த மருத்துவர் உங்கள் உடலில் உள்ள அனைத்துத் தீய விஷயங்களையும், நோய் உள்ள பாகத்தில் உள்ள தீயவற்றையும் மருந்துகள் மூலம் எடுத்து விடுகின்றார்.

எடுத்துத் தூக்கி வீசும் பணியை அவர் செய்கின்றார். ஆனால் அவர் உங்களுக்கு ஆரோக்கியத்தை அளிப்பதில்லை. ஆரோக்கியம் என்பது உங்களிடம் ஏற்கனவே உள்ளது. இப்படிப்பட்ட நிலை ஏற்பட்டால் ஒரு மருத்துவர் நான் உங்களை குணமாக்கி விட்டேன் என்று கூற இயலாது. ஒருவரை சுத்தம் செய்யும் பணியில் இறைவன் உங்களை ஈடுபடுத்தியுள்ளான். அதனால் நன்றியுணர்வுடன் வாழுங்கள்.

சுவாமி விவேகானந்தர் மற்றொரு சமயத்தில் ''நீங்கள் சென்று ஒவ்வொரு பிச்சைக்காரனின் கால்களையும் தொட வேண்டும். அது அவர்கள் பிச்சைக்காரர்கள் என்பதற்காக அல்ல. அவர்கள் மூலம் தானத்தின் மகிமையை நீங்கள் உணர இது ஓர் சந்தர்ப்பமாகத் திகழ்கிறது. நீங்கள் தானமளிக்கும் தருணத்தில் 'இவன் நன்றாக ஆரோக்கியமாகத்தானே இருக்கிறான். ஆனால் சோம்பேறி. பிச்சையளித்து சோம்பேறி களை உருவாக்க நான் விரும்புவதில்லை. ஆதலால் இவர் களுக்கு உதவி செய்யக் கூடாது'' என்று நினைக்கக்கூடாது எனக் கூறியுள்ளார்.

பொதுவாக நாம் இப்படிப்பட்ட எண்ணங்களுடன்தான் தானமளிக்கின்றோம். ''யார் நம்மைப் பார்க்கின்றார்கள்?'' என்று நோட்டமிடுகின்றோம். மேலும் தானமளிக்கையில் புகைப் படம் எடுத்து, செய்தித்தாளில் கொட்டை எழுத்துக்களில் ''இதோ ஒருவன் 'தானமே பிரதானம்' எனும் எண்ணத்துடன் செயல்படுகிறான்'' என்று கூறுகின்றோம்.

ஆனால் ஆன்மீக வாழ்வில் நீங்கள் மற்றவர்களுக்காக உதவிக்கரம் நீட்டுகின்றீர்கள். அவர்கள் பணம் இல்லாதவர்கள் என்பதற்காக அல்ல, ஆனால் உங்கள் ஆன்மாவின் தேடுதலை

நீங்கள் உணர்வதற்காக. எப்படி உங்கள் கைகள், உங்கள் பாதங்களில் அரிப்பு ஏற்படுகையில் தன்னிச்சையாக பாதங் களை நோக்கிச் செல்கின்றனவோ, அது போல நீங்கள் உதவிக்கரம் நீட்டுவதைத் தன்னிச்சையாக செய்தால், அதுதான் மிக உயர்ந்த ஆன்மீகப் பயிற்சியாகும். இதை இறையாண்மையைத் தேடும் ஒவ்வொரு மனிதனும் கடைப்பிடிக்க வேண்டும். ஒவ்வொரு செயலும் இறை சக்தி கொண்டது. அது யோகப் பயிற்சியாக மாற்றப்படுகின்றது.

சமையலறை எனும் புனிதமான இடத்தில் ''தர்மக்ஷேத்திரம் ஒரு குருக்ஷேத்திரமாகும்'' என்பதல்ல. அது அன்ன க்ஷேத்ரம் குருக்ஷேத்ரமாகும். சமையலறையில் தான் அனைத்து சண்டைகளும் தொடங்குகின்றன. அது காலை 3.30 மணிக்கே துவங்குகிறது. ஏனெனில் அப்பொழுதுதான் நீங்கள் 3500 பேருக்கு சமைப்பதற்காக பொருட்களை உக்கிராண அறை எனப்படும் பொருட்களைச் சேகரித்து வைக்கும் அறையிலிருந்து எடுத்து வெளியில் வைக்கின்றீர்கள்.

ஒவ்வொருவரும் ஒரு தலைவர்தான். ஏனெனில் சமைக்கும் பொழுது யார், எதைச் சாப்பிடுவார்கள் என்று உங்களால் ஊகிக்க இயலுமா?

ஆனால் அதுதான் இந்தப் பணியின் அழகு. ஏனெனில் பல்வேறு முரண்பாடுகளுக்கிடையே உங்களுக்குச் சிறந்த உணவு கிடைக்கப் பெறுகிறது.

அதனால் 'வடை' எனும் தின்பண்டத்தை இங்கு செய்ய முன் வந்தார்கள். ஆனால் சுவாமி சிவானந்தாஜி அவர்கள் பிரார்த்தனையுடன், பக்திப்பாடல்களைப் பாடி விட்டுதான் சாப்பிட வேண்டும் என்று கூறிவிட்டார். ஏனெனில் யார், எப்படி, எதற்காக நன்கொடையளித்துள்ளார்கள் என்று நமக்குத் தெரியாதல்லவா? அதனால் ''நீங்கள் இரண்டு ரொட்டி சாப்பிடுகின்றீர்கள் என்றால் நான்கு ரொட்டிக்கான பணியைச் செய்யுங்கள். உடனே அங்கிருந்து அகன்று விடுங்கள்'' என்று கூறுவார்.

ஆஸ்ரமத்தில் வயதான கழுதைகள் செங்கற்களைச் சுமக்கும் பொழுது சுவாமிஜி அதைப்பார்த்து ''நீங்கள் இந்தக்

கழுதையைப் போல பொதி சுமக்கக்கூடாது. இந்த வயதான காலத்தில் அவை இங்கு பொதி சுமந்து, என் கடனைத் தீர்க்கவேண்டிய அவசியமில்லை. இப்பொழுதே, இக்கணமே கடனைத் தீர்த்துவிட்டு, விலகி விடுங்கள்'' என்று கூறுவார்.

ஆரத்தி இலாகா நன்றாக செயல்படுகின்றது. அரிசி சுத்தம் செய்யும் பகுதி நன்றாக உள்ளது. யாரும் எந்தப் பணியும் செய்யாவிட்டாலும் நல்லதே. ஏனெனில் சுவாமிஜி, நன்கொடையளிப்பவர்களின் கர்மவினைகளைத் தீர்த்து விடுகின்றார்.

அதனால் அவர் பணத்திற்காக பிறரை அண்டி பிழைக்கும் ஒட்டுண்ணி அல்ல. அவர் ஒரு உயர்ந்த நிலையடைந்த ஸ்தாபனத்தை நடத்த ஓயாது பணிபுரியும் ஓர் உயர்ந்த குரு. அதனால் அவருக்கு மிக உயர்ந்த மரியாதையளிக்கப்பட வேண்டும். யாரும் உண்பதற்காக இல்லையெனில் ஒருவர் எப்படி சமைக்க இயலும்? உங்களுக்கு பசியுள்ள ஓர் வயிற்றை அளித்து உங்களுக்கு உதவியுள்ளார்!

இது மனோதத்துவத்தின் முற்றிலும் மாறுபட்ட நிலையாகும். இது ஓர் நுண்ணிய பாடமாகும். இங்கு வந்த முதல் சில நாட்களில் கிடைத்ததை எல்லாம் சாப்பிடுவீர்கள். பிறகு நீங்கள் 'இது ஓர் அருமையான இடம். யாருமே நீ ஏன் எந்த வேலையும் செய்யாமல் சோம்பேறியாக இருக்கின்றாய் என்று கேட்பதில்லை. நான் எதையும் செய்வதில்லை' என்று எண்ணுவீர்கள்.

நான்கு நாட்களுக்கு பிறகு உங்களுக்கு ஜீரணம் ஆகாது. அதனால் பல்வேறு பிரச்சனைகள் ஏற்பட, ''நான், வேலை செய்தாக வேண்டும்'' என்று கூறுவீர்கள். பணிகளை பொறுப்புடன் செய்கையில் நீங்கள் அப்பணியின் அழகையும், கம்பீரத்தையும் ஆஸ்ரம வாழ்க்கையில் புரிந்து கொள்வீர்கள். மிக மெதுவாக, நீங்கள் கைகள் - கால்கள் மற்றும் அறிவைக் கொண்டு இதை செய்வதில்லை என்று நன்கு உணருகிறீர்கள். வேறு ஏதோ ஒரு சக்தி உங்கள் மூலம் பணி செய்கின்றது.

நீங்கள் நூற்று எண்பது பத்திரிகைகளைத் தூக்கிக் கொண்டு மற்ற துறவிகளின் அறை, மருத்துவமனை மற்றும்

இதர மூன்று இலாகாக்களுக்கு தருகையில் அது மிக அதிகமான கனத்துடன் கூடிய பணியாகும். நீங்கள் அதைத் தூக்கிச் செல்ல முடியுமா என்றே தெரியவில்லை.

நீங்கள் அதைத் தூக்கிக் கொண்டு விஸ்வநாத் கோயில் வரை கங்கா காட்டிலிருந்து (படித்துறை) செல்ல வேண்டும். அதில் மொத்தம் 120 படிகள் உள்ளன!

எங்கிருந்து அந்த சக்தி உங்களுக்கு கிடைக்கின்றது என்று புரிந்து கொள்ள முயலவேண்டும். நீங்கள் சாப்பிடும் சப்பாத்தி மற்றும் ரொட்டி மூலம் உங்களுக்கு அது கிடைக்காது. ஆனால் அந்த ரொட்டி மூலம் இறைவனின் கருணை உங்களுக்குக் கிடைக்கின்றது. அந்தக் கருணை உங்களுக்கு உரிய சக்தியை அளிக்கின்றது.

நீங்கள் இப்பணியை செய்வதற்கு முன்னர் நீங்கள் உண்ட உணவு விஸ்வநாதர் கோயிலுக்கும், சமாதி கோயிலுக்கும் பிரசாதமாக சென்று இறைவனுக்கு படைக்கப்பட்டு பின்னர் சிவானந்த மஹாராஜ் அவர்களால் ஆசீர்வதிக்கப்பட்டுள்ளது. அதனால் இறையருளின் சக்தி உங்களை வந்தடைந்தது.

அப்பேற்பட்ட உணவை நீங்கள் எங்கும் பெற முடியாது.

ஒருமுறை சுவாமி வெங்கடேசானந்தாவிடம் நான் ஒரு சில காரணங்களுக்காக ஆஸ்ரமத்தை விட்டு செல்ல வேண்டும் என்று கூறினேன். உடனே அவர், "ஆம், நீங்கள் சுதந்திர மானவர்தான்; உங்களுக்கு பிடித்ததை நீங்கள் செய்துதான் ஆகவேண்டும். இந்த ஆஸ்ரமத்திற்கு எவ்வித எல்லைக் கோடும் இல்லை. யார் வேண்டுமானாலும் எந்த வழியாகவும் உள்ளே வரலாம். வெளியே செல்லலாம். ஆனால் உங்களிடம் ஒரு முக்கியமான விஷயத்தைக் கூற விரும்புகிறேன். முருகானந்தா, நீ எங்கு சென்றாலும் சுவாமிஜியின், குரு தேவரின் சாம்பார் உன்னை பிடித்து இழுத்து விடும்!" என்றார்.

அது உண்மைதான்! 1979-ஆம் ஆண்டு சுவாமி வெங்கடேசானந்தா இதை என்னிடம் கூறினார். ஆனால் குருதேவரின் சாம்பார், எனக்கு சுவாமி வெங்கடேசானந்தாவின் ஆஸ்ரமத்திலிருந்து குரு கிருஷ்ணாவின் கையால் கிடைத்தது.

ஆம், இது ஓர் உண்மையான விஷயம். இந்த இடம் நீங்கள் நேராக அமர்ந்து 90° டிகிரி நிலையில், கை கால்களை அசைக்காமல், 'இறைவன் வருவான், உங்களை இறுக அணைத்து அனைத்தையும் தாண்டிய ஓர் பகுதிக்கு அழைத்து செல்லப் போகின்றான்' எனும் ஆன்மீக பயிற்சியைப் பெறும் நிலையம் அல்ல.

உங்களை சிலுவையில் வைத்து அறைவது போல ஒரு சில விஷயங்கள் நடப்பது போல தோன்றலாம். அதே சமயம் மகிழ்ச்சியின் எல்லையில் துள்ளிக் குதிக்கலாம். இதற்கு ஒரே காரணம் டாக்டர் குப்புசாமி (சுவாமி சிவானந்தா) எடுத்துக் கொண்ட துறவறம்தான்.

விதை உடைய வேண்டும்; அது எவ்வித தடையுமின்றி தன்னைத்தானே இரண்டாக உடைத்துக் கொள்ள வேண்டும். அது எவ்வித முணுமுணுப்பும் இன்றி, அன்புடன் மண்ணோடு கலக்க வேண்டும். அந்த மண்ணிலிருந்து வேர்கள் முளைக்க வேண்டும். அந்த வேர்களிலிருந்து மரம் வளர வேண்டும். மரத்திலிருந்து பழங்கள் விளைய வேண்டும். அந்த ருசிமிகுந்த பழங்களை உண்டு, மகிழ்ந்து அம்மரத்தின் நிழலில் மகிழ்ச்சி யுடன் இருக்க வேண்டும்.

அதுதான் அந்த மரத்திற்கு அளிக்கப்பட்ட பணி. அப்பணியைத்தான் சுவாமி சிவானந்தா தொடர்ந்து செய்து வந்தார்.

யாராக இருந்தாலும் சரி, ஒருவர் சட்டத்தை மீறிய குற்றவாளியாக இருந்தாலும் சரி, ஆஸ்ரமத்தில் அவர்களுக்கு வரவேற்பு உண்டு. ஓர் உண்மையான ஆன்மீகத் தேடல் கொண்டவரை நோக்கி ''இங்கு உங்களுக்கு அனுமதி இல்லை'' என்றும் பதில் வரலாம்.

ஒருவர் மிக உத்தமமானவராகவும், தன் வீட்டிலேயே சிறந்த வாழ்க்கை வாழ்பவராகவும், யாரையும் எவ்விதத் தொந்திரவிற்கும் உட்படுத்தாதவராகவும், இருப்பவரைப் பார்த்து ''வேண்டாம், நீங்கள் சென்று உங்கள் கடமைகளை செய்யுங்கள்'' என்று சுவாமிஜி கூறி, அவரை அனுப்பி விடலாம்.

அதே சமயம் குறும்புத்தனம் மிகுந்த, பல அர்த்தமற்ற செயல்களைப் புரிந்த, ஒருவரை அவருடைய பெயரில் ஒரு எச்சரிக்கைக் கடிதத்தில் ''இந்த மனிதரை ஆஸ்ரமத்தில் சேர்க்காதீர்கள்'' என்று எழுதப்பட்டிருந்தாலும் ''இவரை இங்கு தங்க வைத்துக் கொள்ளுங்கள். இவர் ஓர் அருமையான மனிதர். மேலும் இவர் இங்கிருப்பதால் இவ்வுலகில் ஒரு அயோக்கியன் குறைவான்,'' என்பார்!

இதோ, ஆதரவற்றவர்களுக்குக் காட்டும் கருணை!

எங்களைப் பாருங்கள். நாங்கள் செய்யும் தானங்களுக்கு எங்கள் அகந்தையை இரு மடங்காகப் பெருக்கிக் கொள்கிறோம்.

ஒருவர் என்னிடம் கேள்விகளைக் கேட்கிறார். நான் அவருடைய பதிலைக் கொண்டு கேள்விகளைக் கேட்கிறேன். ஏதாவது கேள்விகளுக்கு விளக்கம் கிடைத்து விட்டால் நாங்கள் என்றென்றும் ஒன்றாக இணைக்கப்படும் வழி கிடைக்கின்றது.

அப்படிப்பட்ட ஒரு பாடத்தை எந்த குருவும் அளிக்க இயலாது. ஏனெனில் அது ஓர் கட்டுப்பாடு அல்ல. இந்த இணைப்பு ஓர் அற்புதமான இணைப்பாக மற்றவர்களுடன் உள்ளது. குரு எங்களிடம் நட்பு மட்டுமே கொண்டார். எங்களை ஆதிக்கம் செலுத்தவில்லை.

இதுதான் பிரபஞ்சத்தின் அடிப்படைக் கொள்கை ஆகும். அது ஒரு குறிப்பிட்ட கணத்தைத் தேர்வு செய்து, சரியான அழுத்தத்தை அளித்து, பரிபூரணமான ஒரு மாற்றத்தை ஏற்படுத்துகிறது. இது ஆன்மீகத்தேடல் உள்ள ஆன்மாவிற்குக் கிடைக்கப் பெறுகிறது.

சுவாமி சிவானந்தா மஹராஜ், யார் ஆஸ்ரமத்திற்குள் வருவதையும் தடுக்கவே மாட்டார். சமூகத்துடன் ஒத்துப் போகாதவர் வந்தால் குருதேவர் மிகுந்த மகிழ்ச்சியுடன் வரவேற்பார்.

''ஏனெனில் 'டிவைன் லைஃப் சொஸைட்டி' என்பது சமூகத்திற்கு உதவுவதற்காக உள்ளது. அதனால் ஒரு குற்றவாளியைக்கூட என்னுடன் வைத்துக் கொள்ள வேண்டும்.

அது இந்த உலகிற்கு அளிக்கும் பேருதவியாகும்'' என்று குருதேவர் கூறுவார்.

இப்படிப்பட்ட ஓர் உயர்ந்த எண்ணம் கொண்டு அனைத்தையும் ஏற்றுக் கொள்ளும் தன்மை கொண்டவர்.

பூஜ்ய ஸ்ரீ சுவாமி சிவானந்தாஜி மஹராஜின் ஸ்தூல உடல் இவ்வுலகை விட்டு அகன்ற பிறகும், அங்குள்ள அனைத்து குருமார்களும் இதே போன்ற எண்ணத்துடன்தான் இருந்தனர்.

ஆஸ்ரமத்தில் யாராவது அங்கு தங்கியுள்ளவர்களின் நடத்தையைப் பற்றி ஆஸ்ரம அதிகாரிகளிடம் ஏதாவது கூறினால், குற்றம் கூறியவர்தான் முதலில் விசாரிக்கப்படுவார்!

ஒருமுறை ஒருவர் சென்று ''பாருங்கள், திரு.ஆ. சினிமாவிற்கு சென்றுள்ளார். இங்கு தங்கிக் கொண்டே இந்த நேரத்தில் சென்றார்'' என்று குற்றம் கூறினார்.

வேறு இடமாக இருந்தால் சினிமாவிற்குச் செல்வது என்பது மிகப் பெரிய குற்றமாகக் கருதப்படும். குருதேவர் 'திரு.ஆ' என்பவரை அழைத்து ''என்ன நடந்தது?'' என்று வினவினார். ''ஆம், சுவாமிஜி நான் சினிமாவிற்குச் சென்றேன்'' என்றார். ''எப்பொழுது சென்றாய்?'' எனும் அடுத்த கேள்விக்கு ''நேற்று இரவு'' என்றார் திரு.ஆ.

''அப்படியா, சரி, கங்கை நதியில் ஒரு முழுக்கு போட்டுவிட்டு வா'' என்றார் சுவாமிஜி.

இப்பொழுது குற்றம் கூறியவரின் கோபம் எல்லையைக் கடந்தது. ''ஒரு மனிதன் செய்த மன்னிக்க முடியாத குற்றத்தைப் பற்றி சொல்கிறேன். இந்த சுவாமிஜி அவரை மேலும் இங்கேயே தங்க வைக்கிறாரே'' என்று கோபத்துடன் கூறினார்.

மேலும் மூன்று நாட்கள் கழித்து, குற்றம் சாட்டியவர் ஸ்வாமிஜியிடம் சென்றார். ''சுவாமிஜி'' என்றபடி தலையை சொறிந்தார். ''என்ன?'' என்றார் சுவாமிஜி. ''ஏன், சுவாமிஜி?'' என்று எதிர்க்கேள்வி கொடுத்தார் குற்றம் சாட்டியவர்.

''ஓஹோ, அந்த விஷயமா? நான் அவனைக் கேட்டேனப்பா. அவன் உண்மையைக் கூறிவிட்டான். பிரம்மச்சாரி உண்மையை

தான் பேச வேண்டும். பிரம்மச்சரியத்தைக் கடைபிடிப்பவன் மட்டும் பிரம்மச்சாரியில்லை. அவன் திருமணமாகாதவன் என்பது மட்டுமல்ல. அவன் எப்பொழுதும் உண்மை எனும் உணர்வுடன் வாழ்பவன். அவன் என்னிடம் உண்மையைப் பேசினான். ஒருவேளை அவன் என்னிடம் 'நான் சினிமாவுக்குப் போகவில்லை' என்று கூறியிருந்தால் நான் அவனிடம் 'ஏதாவது ஒரு புண்ணிய ஸ்தலத்திற்குச் சென்று வா' என்று கூறியிருப்பேன்'' என்றார் அந்த மகாகுரு.

நீங்கள் உண்மையை ஒப்புக் கொண்டால், நீங்கள் உண்மையை எதிர்கொண்டால், நீங்கள் உண்மையுடன் இருந்தால், நீங்கள் இந்த இயக்கத்திலிருந்து வெளியேற்றப் படுவதில்லை. நீங்கள் எப்படியோ அப்படியே ஏற்றுக் கொள்ளப்படுகின்றீர்கள். மேலும் அங்கிருந்து உயரே அழைத்துச் செல்லப்படுகின்றீர்கள்.

இந்த இயக்கம் தேடிவரும் ஒவ்வொருவருக்கும் அவர் எப்படிப்பட்டவராக இருந்தாலும் சரி, அவருக்கு வாழ்த்துத் தெரிவிக்கின்றது. இங்கு குத்துச் சண்டை கூட நடந்துள்ளது.

நான் ஏன் இதையெல்லாம் உங்களிடம் கூறுகிறேன்?

மக்கள் ''இவர் எதையும் கற்றுத் தருவதில்லை. ஏதோ நடந்த ஒரு சில விஷயங்களைப் பற்றிப் பேசுகிறார்'' என்று குற்றம் சாட்டலாம்.

ஒரு ஆஸ்ரமம் என்பது ஒரு பல்கலைக் கழகத்தின் தலைமையும், ஆவணப் பதிவாளரும் இயற்றும் சட்டங்கள் அல்ல. ஆம், இங்கும் செய்யக் கூடியவை, செய்யக் கூடாதவை என்று சில விஷயங்கள் உண்டு. இதை நீங்கள் புரிந்து கொண்டு எல்லைகளை நிர்ணயித்துக் கொள்ள வேண்டும். ஆனால் இந்த எல்லைக் கோடுகள் ஆஸ்ரமத்தால் வரையறுக்கப்படு வதில்லை. இந்தத் தெளிவு உங்களிடமிருந்து வெளிவர வேண்டும்.

நீங்களாகவே சிந்தித்து, புரிந்து கொண்டால், உங்கள் திறமைகளைக் காட்டும் இடத்தில் நீங்கள் இணைந்து செயல்படலாம்.

ஆனால் வெளியிலிருந்து ஒரு அழுத்தம் உங்கள் மீது சட்டதிட்டங்களாக விதிக்கப்பட்டால், அதை எப்படி உடைத்தெறிய வேண்டும் என்று உங்களுக்குத் தெரியும்.

சட்டங்களை மதிப்பவன் ஓர் அருமையான மனிதனாகக் கருதப்படுகிறான். ஆனால் எதிர்ப்பவனை ஆஸ்ரமம் ஏற்றுக் கொள்கின்றது. ஏனெனில் கட்டளைக்குக் கீழ்ப் படியாதவனின் அக்குணம்தான், அவன் வளர்ச்சிக்கு உதவுகின்றது.

அதிகாரத்திற்குக் கட்டுப்படாதவன் என்றால் அவன் ஏ.கே. 47 துப்பாக்கியைக் கையில் எடுத்து சுடுபவன் அல்ல என்பதைப் புரிந்து கொள்ளுங்கள். உங்களுக்கு கட்டுப்பாட்டிற்கு எதிராகச் செயல்பட உரிமை உண்டு. ஏனெனில் உங்கள் அடிப்படை குணத்தை வெளிப்படுத்துகின்றீர்கள்.

ஒரு மனிதனாக என்னிடம் மனிதகுணமும் உண்டு. மிருக குணமும் உண்டு. மனிதன் பாதி - மிருகம் பாதி! எதிர் கொள்ளும் குணத்தினால் நான் யாருக்கும் எதிரானவன் அல்ல. அந்த நிலைக்கு ஒத்துவராத ஒரு கட்டுமான அமைப்பிற்கு எதிராக நிற்கின்றேன்.

சுவாமி சிவானந்தா அவர்கள் மிக ஆழமான ஒரு விஷயத்தைக் கூறுவார். "யாராவது கோபத்துடன் பேசினால் அவனிடம் கோபம் கொள்ளாதீர்கள். அவனுடைய கோபத்துடன் கோபம் கொள்ளுங்கள்." இது மிகக் கடினமான ஒரு விஷயமாகும். உங்கள் எண்ணப் போக்குடன் ஒத்துவராத உங்கள் நடவடிக்கைகளுடன் ஒத்துப் போகாத ஒருவரிடம் அன்பு செலுத்துவது மிகக் கடினம்.

சுவாமி சிவானந்தா அவர்கள், சண்டை போட்டுக் கொள்ளும் இருவரையும் அழைத்து, தன் அருகில் அமர்த்திக் கொள்வார். பிறகு அவர்களிடம் எதுவும் பேசாமல் உணவு அளிப்பார். 'யார் பக்கம் நியாயம்? என்று கேட்கமாட்டார்.

ஆனால் அவர் "இந்த இருவரும் உண்மையானவர்கள். ஏனெனில் இந்த சூழ்நிலையில் சேர்ந்து இருக்க முடியாது என்பதைத் தெளிவாக வெளிப்படுத்துகின்றார்கள். ஆனால் இவ்வுலகில் மிக அருமையானவர்களாக இருப்பவர்கள்

ஒருவரைப்பற்றி எவ்விதக் குறையும் கூறாமல் ஒருவரோடு ஒருவர் அருகில் அமர்ந்திருப்பார்கள். ஆனால் மனதில் ஒருவரைப் பற்றி ஒருவர் எக்கச்சக்கமான குறைகளைக் கொண்டிருப்பார்கள். இப்படிப்பட்டவர்கள் எக்காலத்திலும் மேலே உயர இயலாது'' என்று கூறுவார். சுயமாகத் தெரிவித்தல் முக்கியம். மனதில் ஒளித்து வைத்துக் கொள்வது சரியல்ல.

இது ஒரு சாதாரண வழக்கத்திற்குரிய அணுகுமுறையாகும். ஒரு மடாலயத்தில் அனைத்தும் தெள்ளத் தெளிவாக இருக்கவேண்டும். நீங்கள் அதனுடைய அடிப்படையை மீறி நடந்து கொண்டால், நீங்கள் ஆஸ்ரம வாழ்க்கைக்கு ஒத்துப் போகாதவர் எனும் எண்ணம், பொதுவாக நமக்கு உண்டு.

நீங்கள் பிறக்கும் பொழுதே ஒரு துறவியாகப் பிறப்பதில்லை. துறவறம் என்பது உங்களுக்கு அளிக்கப்பட்ட ஒரு பொறுப்பு. இப்பொறுப்பை ஏற்று, பல முரண்பாடுகளைத் தாண்டி, ஒரு புரிதல் மற்றும் முதிர்ச்சி கொள்ள வேண்டும். இதன் அடிப்படையில் உங்கள் அடிப்படைத் திறனைப் பெருக்கி, உங்களை நீங்களே மிக உண்மையாக உணர வேண்டும். அவ்வுண்மையைக் கொண்டு இவ்வுலகை எதிர்கொள்ள வேண்டும்.

ஆனால் இன்றைய கல்வி முறையில் வெளி உலகில் காணப்படும் படுகுழிகளைப் பற்றி கூறுவார்கள். வரைபடம் போன்ற ஒன்றின் துணைகொண்டு, எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்று கூறுவார்கள். உடனே நீங்கள் இவ்வுலக வாழ்க்கையில் நன்றாக ஓடலாம் என்று எண்ணுவீர்கள்.

ஆனால் இந்த முறையில் உங்களை நீங்களே புரிந்து கொள்வது என்பது இயலாது. பெற்றோர்கள் கூட, தங்கள் குழந்தைகளுக்கு எது நல்லது என்று அந்த பெற்றோர்களே தீர்மானிக்கின்றார்கள். ஆனால் அக்குழந்தைக்கு 'எனக்கு இது சரியானதல்ல' என்று தோன்றுகிறது.

ஆனால் நாம் நம்முடைய எண்ணங்களை அவர்கள் மீது திணிக்கிறோம். இத்தகைய விஷயத்தினால் பாதிக்கப்படும் குழந்தைதான் சமூகத்துடன் ஒட்டாத எண்ணங்களை

வளர்க்கின்றது. ஏனெனில் பெற்றோர்களின் அதீத கவனிப்பி னால் தன்னுடைய கபடமற்ற தன்மையை இழக்கின்றது. அதற்குப் பெற்றோர்களின் பாதுகாப்பு உண்டு. ஆனால் அக்குழந்தை தன்னுடைய சுதந்திரத்தின் வாசம் மற்றும் மனோதத்துவ சக்தியை முற்றிலும் இழந்து விடுகின்றது. அதனால் இச்சமூகத்தில் அக்குழந்தை தோற்றுப் போகின்றது. அதனுடைய வளர்ப்பில் உள்ள தவறினால், தானும் இச்சமூகத்தில் தன்னுடைய நடத்தையைத் தவறாகப் பயன்படுத்தி குழப்பம் மற்றும் கலவரத்தைத் தோற்றுவிக்கின்றது.

எல்லா சமயத்திலும் காரணமற்ற கோபாவேசம் கொள்வதை அனுமதிப்பது என்பது சரியான வளர்ப்பு முறை யல்ல. ஆனால் ஒரு குறிப்பிட்ட தூரம் வரை செல்லவிட்டு, பிறகு சரியான சமயத்திற்காகக் காத்திருந்து அந்த அகம்பாவத்தை உடைத்தெறிவதுதான் சரியான முறையாகும்.

உங்களுக்குப் பிடித்ததை செய்ய போதிய சுதந்திரமளிக்கா மல், அதே சமயம், சரியான சமயத்தில் 'தான்' எனும் அகங்காரத்தை உடைத்தெறியும் பணியைத்தான் குரு என்பவர் செய்கின்றார்.

அதனால்தான் அவருக்கு நன்றிக்கடன் பட்டுள்ளோம்.

இன்று நாம் கணினி உலகில் வாழ்கின்றோம். பல விஷயங்களைச் சுருக்கமாகவும், சுலபமாகவும் செய்ய நினைக்கின்றோம். அது போன்றே அகம்பாவத்தைப் பற்றியும் நினைக்க வேண்டும். அகம்பாவத்தைத் தூக்கி எறிய வேண்டும். இதை மிக நுணுக்கமாக, முறையாக, நேர்த்தியாக, அழகாக அனைத்தையும் உணர்ந்த ஒருவர் செய்வார்.

ஸ்ரீசிவானந்த மகராஜ் ஓங்கி, உயர்ந்து நின்று நம்முடைய அற்புதத்தையும் நம் ஒவ்வொருவருடைய தோல்விகளையும் அறிந்தவர்.

இன்றும் அவருடைய சீடர்கள் மூலம் நம்மை உற்று நோக்குகிறார். இது ஏதோ யாரோ எங்கோ சென்றுவிட்டார்; நம் கண்களுக்குப் புலப்படாமல் இருக்கின்றார் என்பதல்ல. ஏதோ

ஓர் இடத்தில் அலங்கரிக்கப்பட்ட சமாதி உள்ளது. அங்கு சென்றுதான் அவரை வணங்க வேண்டும் என்பதல்ல.

அவர் உயிருடன், உடல் ரீதியாக பூமியில் இருக்கையில் அவருக்கும், நமக்கும் இடையே ஓர் இடைவெளி இருந்தது. ஆனால் இன்று அந்த இடைவெளியில்லை. ஏனெனில் நீங்கள் விண்வெளிமூலம் அவரை அணுகவில்லை. நீங்கள் நேரடியாக, மனோநிலைக்கு ஏற்றார்போல் தொடர்பு கொள்கின்றீர்கள்.

ஆகையால் மனரீதியாகவும், உடல் ரீதியாகவும் எவ்வித இடைவெளி, தூரம், நேர காலம் என்று எதுவுமில்லை. ஆனால் உடல்ரீதியாக நேர காலம் மற்றும் இடைவெளி உள்ளது. அதைத் தாண்ட இயலாது. மேலும், உங்களுடைய குரு என்று கொண்டாடியவரைக் கண்களால் காண இயலாது.

இச்சமயத்தில் தொடு யோகம் (ஸ்பர்ஸ யோகா) என்பதிலிருந்து தூரத்தே தொட இயலாத யோகம் (அஸ்பர்ஸ யோகா)வாக மாறிக் கொள்வதுதான் ஒரே வழி.

இந்த குருவிடம் இதுதான் மிக அழகான உணர்வு, உலகம் முழுவதும் இவருடைய சீடர்கள் பரவியிருந்தனர். அவர்கள் உலகம் முழுவதும் பயணிப்பது மட்டுமல்ல, உலகின் பல்வேறு பாகத்திலிருந்தும் இவரைத் தேடி சீடர்கள் வந்தனர்.

நான் உலகம் முழுவதும் திரியும் ஒரு நாடோடி. இன்றும் அதைத் தொடர்ந்து செய்து வருகிறேன். நான் நூற்றுக்கணக்கான நாடுகளுக்குச் சென்றிருக்கிறேன். நான் எங்கு சென்றாலும் சரி. குருதேவரை அறிந்தவர்கள், அவருடைய புத்தகங்களைப் படித்தவர்கள், அல்லது அவருடைய இயக்கத்தினை நடத்துப வர்கள் அல்லது ஏதோ ஒரு விதத்தில் அவரோடு தொடர்பு உள்ளவர்கள் என்று எப்படியோ சந்தித்துவிடுகிறேன்.

எங்கோ ஓர் இடத்தில் அமர்ந்துகொண்டு, பல வித்தியாச மான மக்கள், பல வித்தியாசமான பின்னணியிலிருந்து வந்தவர்கள், பல்வேறு குணாதிசயங்களைக் கொண்டவர்கள், என்று அனைத்துத் தரப்பு மக்களையும் கவர்ந்தவர். நாடோடியாகத் திரியும் ஆன்மாக்களுக்குள் ஊடுருவியவர்.

எப்பொழுதெல்லாம் பிரபஞ்ச சக்தியில் அழுத்தம் ஏற்படுகின்றதோ, அப்பொழுதெல்லாம் அழகையும், இந்த வாழ்க்கைக்கு அர்த்தத்தையும் அளிக்க இத்தகைய குருமார்கள் தோன்றுகின்றனர்.

நீங்கள் செய்யும் தவறு உங்களுடையது அல்ல என்று மீண்டும், மீண்டும் வலியுறுத்தப்பட்டது. தவறுகள் செய்வது சகஜம்தான். ஒரு மனிதப் பிறவியாக உங்கள் பலவீனங்கள் உங்களுக்கே உரியவை. ஒரே தவறு நீங்கள் செய்யும் தவறுகளை மீண்டும், மீண்டும் செய்வதுதான். அதை மட்டுமே நினைவில் கொள்ள வேண்டும். மிக எளிமையான கட்டளை!

ஆனால் 'நான் தவறிழைக்கிறேன்' என்று யாராவது ஒப்புக் கொள்வார்களா?

''நான் ஏதோ ஒரு தவறு செய்து விட்டேன். அவர்களுக்குத் தெரியாது. நான் மீண்டும் அதைச் செய்யலாமா?'' என்று கேட்டால், நீங்கள் உங்களையே ஏமாற்றிக் கொள்கிறீர்கள்.

இதுதான் ஸ்ரீ கிருஷ்ணானந்த ஸ்வாமிஜியின் நேரடிப் பாடமாக இருந்தது.

அவர் மிகவும் கண்டிப்பான மனிதர். ஆனால் அதே சமயம் அவரிடம் ஒரு தாயைப் போன்ற வாஞ்சையும், விட்டுக் கொடுத்துச் செல்லும் குணமும் இருந்தன.

நாங்கள் அவரிடம் குறும்பு விளையாட்டு விளையாடு வோம். உங்கள் தந்தையை எப்படி ஏமாற்ற வேண்டும் என்று உங்களுக்குத் தெரியும். அது எப்பொழுதும் அனுமதிக்கப் படுகின்றது. ஒரு தந்தைக்கு தான் எப்படி தன் பெற்றோரை ஏமாற்றினோம் என்று நன்கு தெரியும். இப்பொழுது என் மகன் என்னை ஏமாற்றுகிறான். தனக்கு அமைதியாக இருப்பதைத் தவிர வேறு வழியில்லை.

ஒரு ஆசிரியர் அதைப் புரிந்து கொண்டால் அவர் மனிதர் களின் பலவீனங்களை அறிந்து சரி செய்ய முயலுகின்றார். ஆனால் ஒரு குருநாதர் அதைப் புரிந்து செயல்படுகையில், அவர் மனித குல குணங்களின் எல்லைகளை அறிந்தவர்

என்பதால், அவர் உங்களுக்கு தண்டனை வழங்குவதில்லை. அவர் உங்களை அணைக்கின்றார். அவர் உங்களைத் தூக்கி வெளியே போடுவதில்லை. அவர் உங்களிடம் 'நன்றி' எனும் வார்த்தையை எதிர்பார்ப்பதில்லை.

எந்தத் தாயும் தன் குழந்தையிடம் 'நன்றி' எனும் சொல்லை எதிர்பார்ப்பதில்லை. ஆனால் ஒவ்வொரு குழந்தைக்கும் ''தாங்க்யூ (நன்றி) என்று கூறவேண்டும்'' என்று நாம்தான் கற்றுத் தருகின்றோம். ஒவ்வொரு முறையும் தாய் ஒரு கோப்பை தண்ணீர் அளித்தால் நாம் உடனே 'நன்றி' என்று கூறவேண்டும் என்றால், அந்தத் தாய் ஒரு அன்னியராக மாறிவிடுகின்றார்.

நாம் உணவு உண்ணும் பொழுது, வலது கை வாயில் போடும் உணவுக்கு நன்றி என்று கூறுகின்றதா? 'நன்றி' என்று கூறினால். நீங்கள் அந்நியராகி விடுகின்றீர்கள். நீங்கள் எதற்காகவும் 'நன்றி' என்று கூறவேண்டிய அவசியமில்லை.

எங்கள் ஆஸ்ரமத்தில் நாங்கள் சிறுவர்களாக வளர்கையில் இந்தப் புரிதல் கற்றுக்கொடுக்கப்பட்டது. 'சிறுவர்கள்' என்று நான் குறிப்பிடுவது வயதின் காரணமாக அல்ல. அனுபவ முதிர்ச்சியின்மை காரணமாக!

நாங்கள் அனைவரும் தோல்வியுற்ற ஓர் கூட்டமாக இருந்தோம். ஒட்டுமொத்தமாகச் சேர்த்துப் பார்த்தால், அச்சமயத்தில் 118 பேராக நாங்கள் இருந்தோம் என்றாலும் நாங்கள் அனைவருமே முட்டாள்களாக இருந்தோம். ஆனால், அங்கு அவர்கள் எங்களை உருவாக்கினார்கள் என்றாலும் எப்படி, எதை உருவாக்கினார்கள் என்று எங்களுக்குத் தெரியாது. எங்களுக்குத் தெரியாமலேயே அது நடந்தது.

நாங்கள் எவ்வளவு மோசமாக நடந்து கொண்டோம் என்று எங்களுக்குத் தெரியும். அச்சமயத்தில் அங்கு வாழ்ந் திருந்த குருமார்களைப் பற்றிப் பேசவில்லை. நான் பேசுவது 1970களில் அங்கு வந்து சேர்ந்த புதுவிதமான மனிதர்களைப் பற்றித்தான். நாங்கள் அனைவரும் தோல்வியுற்றவர்கள்தான்

என்றாலும், அங்கு சென்ற ஆறாவது மாதத்திலேயே எங்களுக்குள் ஒரு மாற்றம் ஏற்பட்டது.

சுவாமி சிவானந்தா மஹராஜ் அக்கால கட்டத்தில் ''நீங்கள் அனைவரும் டிவைன் லைஃப் சொஸைட்டிக்கு வாருங்கள். நீங்கள் இறைவனை உணரும்படி செய்கிறேன்'' என்று எழுதுவார். பலர் தங்களுடைய சிறந்த பணிகளை விட்டு, ஆஸ்ரமத்திற்குள் வந்தனர். ஆஸ்ரமத்தில் ஆறு அல்லது ஏழு மாதங்கள் தங்கினர். ஒன்றும் நடக்கவில்லை. இறைவனைப் பார்க்கவில்லை, உணரவுமில்லை.

அவர்கள் மிகவும் கவலைப்பட்டனர். 'இது என்ன? எல்லாவற்றையும் விட்டு, இங்கு வந்து இறைவனை உணர வேண்டும் என்று எண்ணினோம். ஆனால் எதுவும் நடக்கவில்லை.' ஆனால் ஒரு வருடம் கழித்து, அவர்களுக்குப் புரிந்தது.

அதாவது இறைவனை உணர்வது என்பது நீங்கள் கடைவீதியில் வாங்கும் ஒரு பொருளல்ல, அதை உங்களுக் குள்ளேயே நீங்கள் வாங்குகின்றீர்கள். உங்களுக்குள்ளேயே நீங்கள் வாங்க வேண்டுமென்றால் உங்களிடம் உள்ள அகம் பாவத்தை ஒழிக்க வேண்டும். டிவைன்-லைஃப் சொஸைட்டி என்பது அகந்தையை உடைக்கும் தொழிற்சாலை!

இன்று பலர் நம்மிடம் வந்து ''நீங்கள் இல்லாமல் டிவைன் லைஃப் சொஸைட்டி இயங்க முடியாது. நீங்கள்தான் மிகச் சிறந்த பேச்சாளர், நீங்கள்தான் மிகச் சிறந்த பாடகர், நீங்கள்தான் மிகச் சிறந்த 'டைப்பிஸ்ட்' என்று கூறுவார்கள். உங்களை மிகவும் உயர்த்திப் பேசுவார்கள் இதை 72 மணிநேரங்கள் தொடர்ந்து அவர்கள் செய்யலாம். மிகச்சிறந்த உணவு - தேன், பால் என்று பலதும் நம்மைத் தேடி வரலாம்.

ஆனால் 72 மணி நேரங்கள் கழித்து நீங்கள் 'எங்கே பால், தேன், வெண்ணெய், ரொட்டி, உணவு' என்று தேடவேண்டிய நிலைமை ஏற்படும். யாரும் உங்களோடு பேசமாட்டார்கள்.

நீங்கள் தன்னந் தனியாக விடப்பட்ட கணத்திலிருந்து நீங்கள் யார் என்பதை அறிய போராடுவீர்கள். நீங்கள் உங்களை அறிந்தால், பிறகு சீடன் மலர்ந்து விடுவான். எக்கணத்தில் சீடன் 'மலர்கின்றானோ அப்பொழுது குருவின் ஆசிகள் சிறந்த நறுமணத்தை அளிக்கின்றன.

அதனால்தான், நாம் உயர்ந்த குருமார்களை நமஸ்கரிக்கின்றோம். இப்படிப்பட்ட சந்தர்ப்பங்கள் நமக்கு தைரியத்தையளித்து, உந்துதல் சக்தி அளித்து, அத்தகைய அருமையான ஆன்மாவிற்கு நன்றிகூற ஒரு சந்தர்ப்பமளித்து சுவாமி சிவானந்தாவின் அதிர்வலைகள் நம்மை இங்கே உட்கார வைத்து கேட்க வைத்துள்ளது. இதுதான் அவருடைய ஆசிகள், அவருடைய பலம் மற்றும் அவருடைய சக்தி.

ஆசிரியர் நமக்குக் கற்றுத் தந்ததற்கு நன்றி கூறலாம். ஆனால் ஒரு குருவுக்கு என்ன கூற இயலும்! நீங்கள் எவ்வளவு தான் நன்றிகூற முற்பட்டாலும் அது போதாது. அப்படிப்பட்ட ஓர் முழுமையான தனித்துவம். தன்னுடைய அன்பான அரவணைப்பால் நம்மையும் முழுமையாக்குகின்றார். அதனால் நாம் அவருக்குக் கடமைப்பட்டுள்ளோம்.

இன்றைய புண்ணிய நாளில், இத்தகைய அருமையான சூழ்நிலையில், சிறந்த மனங்களும், அறிவு சார்ந்த மக்களும் ஒன்று சேர அமர்ந்திருக்கின்றீர்கள். சற்றே யோசித்துப் பார்க்கையில், இங்கு, இந்த அறையில் சுவாமி சிவானந்த மஹராஜ் அமர்ந்திருக்கின்றார். நம் அனைவரையும் நன்கு ஆசீர்வதித்துக் கொண்டிருக்கின்றார்.

நமக்குள் இருக்கும் தடைகளையும் தாண்டி இன்றைய நன்னாளில் 2009-ஆம் ஆண்டில் நமக்கு அளிக்கப்படும் ஆசீர்வாதங்கள் 2010-ஆம் ஆண்டு தென்னாப்பிரிக்க நாட்டுக்கு வெற்றியளிக்கட்டும். நம் அனைவரையும் சக்தி வாய்ந்த மனிதர்களாக வளர்க்கட்டும். ஏனெனில் முதலில் நாம் நல்ல மனிதர்களாக மாறினால்தான் இறையாண்மை என்ன என்பதைப் புரிந்து செயல்படுவோம்.

இனி வரவிருக்கும் ஆண்டுகளில், இங்கு நாம் செலவிட்ட அருமையான இக்கணங்கள் மிக உயர்ந்த இடத்திற்கு அழைத்துச் சென்று சிறந்த பூரணத்துவத்தை அளிக்கட்டும். இனி நமக்குக் கிடைக்கும் பரவசம் மற்றும் ஆனந்தத்தின் ஒளி பொருந்திய தருணங்கள். இக்கணத்தின் வாழ்விலேயே நமக்குக் கிட்டட்டும். இது நம் குரு பூஜ்ய ஸ்ரீ சிவானந்தாஜி மஹாராஜின் அருளில் கிட்டட்டும் என்பது என்னுடைய பணிவான, அதே சமயம் மிக உயர்வான பிரார்த்தனையாகும். இந்தப் பிரார்த்தனையை நம்முடைய மற்ற ஆசிரியர்கள், குருமார்கள் மற்றும் சத்குருக்களுக்கும் சமர்ப்பிக்கிறேன்.

அவர்கள் அனைவரும் நம்மை ஆசீர்வதிக்கட்டும் என்பது என்னுடைய எளிமையான பிரார்த்தனை.

---



## 2. ஜூலை - 2009
## ஒரு புண்ணிய ஆராதனை

**நா**ன் உள்ளே வருகையில், மாதாஜி தெள்ளத் தெளிவாக இன்று கொண்டாடப்படும் தினத்தின் அருமையை விளக்கிக் கொண்டிருந்தார்.

ஓர் உயர்ந்த ஞானி இவ்வுலகில் வாழ்ந்து, நம்மைவிட்டுப் பிரிந்த நாளைக் கொண்டாடுவது ஏன் என்று நீங்கள் எண்ணலாம்.

நம்மை விட்டுப் பிரிந்து, வேறெங்கோ சென்றுவிட்ட, நம் கண்களிலிருந்து மறைந்துவிட்ட, நம் உணர்வுகளிலிருந்து மறைந்துவிட்ட ஒரு நிகழ்வை மகிழ்ச்சியாகக் கொண்டாடுவதா?

மிக உன்னதமான, தனித்துவம் நிறைந்தவருக்காக உலகம் முழுவதும் கொண்டாடப்படுகின்றது. ஏனெனில் ஆன்மீகத் தேடுதல் உள்ள ஒருவர் ஞானம் பெறவும், புரிதல் பெறவும், மகிழ்ச்சியாக இருக்கவும், எவ்விதம் நடந்து கொள்ள வேண்டும் என்பதற்கு அவர் உதாரணமாகத் திகழ்ந்தார்.

அப்பொழுது, மகிழ்ச்சியைத் தேடி அடைய இயலுமா எனும் கேள்வி எழுகின்றது. நம் மனதின் பலவீனங்கள் மற்றும் புரிந்து கொள்ளும் சக்தி எப்பொழுதும் வித்தியாசமான குழப்பங்களை ஏற்படுத்துகின்றன. இந்த உலகில் எவ்விதம் வாழ்வது, எப்படி மகிழ்ச்சியைப் பெறுவது என்று நமக்குத் தெரிவதில்லை.

ஆன்மீகத் தேடுதல் உள்ளவர்கள் எப்படி இறைவனை அடைவது என்று அறியவில்லை என்று இராமாயணத்தில் கூறப்பட்டுள்ளது. ஏனெனில் எதைத் தேடுகிறோம் என்று அறியாதவரையிலும் யாரும் எதையும் தேட இயலாது.

அடிப்படை புத்தி, விஸ்தரிக்கும் புத்தி, அறிவு நிறைந்த புத்தி, பக்தியுள்ள புத்தி, விவேகமுள்ள புத்தி உள்ளவர்கள் இறைவனைப் பல்வேறு விதமாகத் தேடுகின்றனர்.

ஸ்ரீராமர் மனமிரங்கி நமக்கு அருள்புரிய பூமிக்கு வருகின்றார். அவர் இங்கு வருகையில் இறையருளைத் தேடும் அனைவரையும் அழைத்து வந்தார். பிற்பாடு அவர்கள்தான் வானரசேனை என்று நாம் அறிந்தோம்.

அது ஏதோ ஒரு சாதாரண வானரங்கள் நிறைந்த சேனை அல்ல. எப்படி மனம் அடிப்படை மனிதத் தன்மையுடன் இணைகின்றது, எப்படி பக்தி என்பது அதை மிகப்பெரிய உயரத்திற்கு அழைத்துச் செல்கின்றது; அங்கு எப்படி அனைத்திற்கும் மூல காரணமான ஸ்ரீராமரை, எப்படி ஒரு வானரம் மரத்தின் உச்சிக்குத் தாவுகின்றதோ, அதுபோல சந்திக்கின்றது என்பதைக் காட்டுகிறது.

இது போன்றே 123 வருடங்கள் முன்பும் 46 வருடங்கள் முன்பும் ஒரு அவதாரம் தோன்றியது. இன்றைய தேதியில் 46 வருடங்கள் முன்பு மிக உயர்ந்த ஞானியான சுவாமி சிவானந்தா மறைந்து விட்டார்.

இன்று உலகில் எந்த மூலைக்குச் சென்றாலும் சுவாமி சிவானந்தாவை அறியாதவரில்லை.

நீங்கள் கூகுள் தேடலில் சென்றால், ஒரு இலட்சத்திற்கும் மேல், சுவாமி சிவானந்தாஜி மஹராஜ் கூறிய வரிகள் பதிவாகியுள்ள வலைத் தளங்கள் உள்ளன. அதை உங்களால் படிக்க இயன்றால் அது உங்கள் இதயத்தைப் பிளந்துவிடும்.

நாம் அனைவரும் தேடுதல் உள்ளவர்கள்தான். நமக்கு எதிரில் குவிந்து உள்ள பல ஆன்மீகத் தகவல்களைக் கண்டும் நமக்கு எவ்விதம் ஆன்மீக பயிற்சி பெறுவது என்பதில் பெருங் குழப்பம் உள்ளது. ஆனால், இன்று நாம் அனைவரும் கூடி, மகிழ்ச்சிகரமாகக் கொண்டாடும் நாளுக்கு உரியவரான ஸ்ரீ சிவானந்தா ஸ்வாமிகளின் ஆசியில் நமக்கெல்லாம், பல இடைவெளிகளைத் தாண்டி, தினந்தோறும் நாம் சந்திக்கும் துன்பங்களையும் தாண்டி நாம் ஒரு வழியைத் தேடுகிறோம்.

இடைவெளிகளும், துன்பங்களும் நம்முடைய ஆசைகளினா லும், கர்வத்தினாலும், நாமே ஏற்படுத்திக் கொள்வதுதான்.

நம் இதயத்தின் ஆழத்தில் நாம் ஏதாவது ஒரு நன்மையை நமக்கு மட்டுமல்ல இவ்வுலகிற்கும் செய்ய வேண்டும் என்று ஒரு எண்ணம் கொள்வோம். அதற்காக உயர்ந்த இலட்சியம் மற்றும் சாத்தியமான பணிகள் இவை இரண்டிற்கும் நடுவில் எப்பொழுதும் ஒரு மறைமுகப் போர் நடந்து கொண்டே யிருக்கும்.

உலகம் என்பது ஏதோ, நமக்கு வெளியில் மட்டுமே உள்ளது என்று எண்ணுகிறோம். ஏனெனில் அதைத்தான் நம்முடைய பஞ்சேந்த்ரியங்கள் நம்மிடம் கூறுகின்றன. நம்மிடமிருந்து வெளியே தெரியும் உலகிற்கு நாம் ஏதோ கடமைப்பட்டிருக்கின்றோம் என்று எண்ணுகின்றோம்.

உலகின் பணிகளுக்கு நம்மை எப்படிப் பொருத்திக் கொள்வது என்று எண்ணுகையில் நமக்குள் குழப்பங்கள் தோன்றுகின்றன.

அறிவு, சக்தி மிகுந்த உடல், பணம் சம்பந்தமான திறமைகள், சமூகத்தில் அடையாளம், மற்றும் அரசியல் ஸ்தாபனம் நமக்குப் பல்வேறு விதமான சத்திய பிரமாணங்கள், நம்மைத் தாங்கும் மக்கள் என்று பல நம்மை சூழ்ந்துள்ளன. இத்தனை இருந்தும் நாம் ஒரு பாதையைத் தேர்ந்தெடுக்க இயலாமல் தடுமாறுகின்றோம்.

ஆனால் சுவாமி சிவானந்த மஹராஜ் அவர்கள் ஒரு சீடராக எப்படியிருக்க வேண்டும் என்று நடந்து காட்டினார்.

சுவாமி சிவானந்தாஜி தன் குருநாதர் மீது கொண்டிருந்த பக்தியை அளவிட முடியாது. எப்பேர்ப்பட்ட பக்தியை அவர் தன் குருநாதர் சுவாமி விஸ்வானந்தாஜி மீது கொண்டிருந்தார்! தன் குருநாதரோடு சுவாமி சிவானந்த மஹராஜ் ஒரே ஒரு நாள் தான் நீண்ட நேரம் பேசியுள்ளார்.

மறுநாள் குரு அவரை விட்டு அகன்று விட்டார். சுவாமி சிவானந்தா அவர்களின் குருநாதரைப் பற்றி அதிகம் யாருக்கும்

தெரியாது. அவர் எப்படிப்பட்ட தோற்றம் கொண்டிருப்பார் என்றும் தெரியாது.

சுவாமி சிவானந்தாவின் முக்கிய சீடர்களாக சுவாமி வெங்கடேசானந்தாஜி மஹராஜ், சுவாமி க்ருஷ்ணானந்தாஜி, சுவாமி சின்மயானந்தாஜி, சுவாமி விஷ்ணு தேவானந்தாஜி, (ஃபிஜிநாட்டிலிருப்பவர்) இவர்களில் யாருக்குமே குருநாதர் மற்றும் அவரது சீடரான சுவாமி சிவானந்தாஜிக்கும் நடுவில் அந்தக் குறுகிய காலகட்டத்தில் என்ன நடந்தது என்று தெரியாது.

என்ன நடந்திருக்கும்? முற்றிலும் துறந்தவராக மாற வேண்டும் என்று எண்ணி, தேடிய சீடனுடைய சுத்தமான உண்மையான போக்கு என்ன? மலேசிய நாட்டில் தான் இருந்த மிக உயர்ந்த பதவியைத் துறந்து, ஹிமாலயபர்வதத்தின் நிழலில் தேடுதலும், ஆன்மீகப் பேராவலும் கூடிய உணர்வுடன் தேடிக் கொண்டிருந்த இந்த சீடனின் மனோநிலை எப்படி இருந்திருக்கும்?

சுவாமி விஸ்வானந்தாஜிக்கும் சுவாமி சிவானந்தாஜிக்கும் இடையே எவ்வித ஊடுருவும் ஒளி பாய்ந்திருக்கும் என்பதை யாராலும் புரிந்து கொள்ள இயலவில்லை. ''நாங்கள் பலமுறை குருதேவரிடம் இதைப் பற்றிக் கேட்டிருக்கின்றோம். ஆனால் அவர் மௌனம் சாதித்துள்ளார்'' என்று தான் கூறியுள்ளார்கள்.

இந்த மாற்றம் என்பது ஒரிடத்திலிருந்து மற்றொரு இடத்திற்கு மாற்றுவது போல அமைந்தது. அந்த மஹாகுரு தன்னை முழுமையாக ஒரு பார்வை, தொடுதல், ஒரு வார்த்தை மூலமாக தன் சீடனுக்கு அளித்தார். மிகப் பெரிய மாற்றத்தை ஏற்படுத்தி, இந்த சீடன் வெறும் சீடனாக மட்டுமின்றி மஹாயோகியாக மாற வைத்தது.

துறவறத்தில் நாம் பணத்தைத் துறக்கலாம். நம் பதவியைத் துறக்கலாம். இன்னும் பலவற்றைத் துறக்கலாம். ''இதைத் துறந்தேன், அதைத் துறந்தேன்'' என்று கூறலாம். ஆனால் மிகப்பெரிய தியானமான இந்த மஹா தியாகத்தை பகவான் சுவாமி சிவானந்தா தான் மேற்கொண்ட துறவறப்

பாதையில், தான் துறவறம் மேற்கொள்வதையே துறக்கும் புரிதல் கொண்டிருந்தார். ஏனெனில் அவருக்கு வெளியே புறம்பான விஷயங்கள் எதுவுமேயில்லை.

'நான் இதைத் துறக்கின்றேன்' எனும் எண்ணம் மனதில் தோன்றுவது என்பது உங்களுக்கும் வெளிப்புறத்திற்கும் ஏதோ இணைப்பு உள்ளது போலவும், நீங்கள் அதைத் துறப்பது போலவும், எண்ணங்கள் தோன்றுகின்றன.

ஆனால் நீங்கள் இணைந்து, உட்படுத்திக் கொண்டு, ஒன்று சேர்த்து, ஓர் உடலில் கை, கால்கள் எப்படி இணைந்துள்ளனவோ, அதுபோன்று இணைந்து இருந்தால் எப்படி விரல்கள் உடலில் இருந்து கழற்றப்படுவதில்லையோ, புத்தி என்பது உடலில் இருந்து தனியாக எடுக்கப்படுவ தில்லையோ, அறிவு உடலில் இருந்து தனியாக எடுக்கப் படுவதில்லையோ அது போன்றே துறப்பதற்கு ஒன்றுமில்லை.

மஹா தியாகி என்பதால் அவரை எதுவும் உள்ளம் உருகச் செய்தது இல்லை. எதையாவது மற்றவர்களுக்கு அளிப்பது அவருக்கு மகிழ்ச்சியளித்தது இல்லை, எதையாவது தொலைப்பது அவருக்கு வருத்தம் அளித்ததில்லை. ஏனெனில் அவரிடமிருந்து வெளிப்புறத்தில் தோன்றியது எதுவுமில்லை. அவருக்கு அனைத்தும் முழுமைதான்.

உயர் இலட்சியம் கொண்ட ஒரு சீடர் எப்படி இருக்க வேண்டும் என்பதைத்தான் சுவாமி சிவானந்தா முதலில் தன் சீடர்களுக்குக் கற்றுத் தந்தார். இதை தன் சீடர்களுக்கு தானே சீடராக இருந்து கற்றுத் தந்தார்.

அவர் யாருக்கும் கடிதம் எழுதி ''நான் உங்கள் குருவாக இருப்பேன்'' என்று எழுதியதில்லை. ஆனால் பலர் ''சுவாமிஜி என்னை உங்கள் சீடராக ஏற்றுக் கொள்ளுங்கள்'' என்று கேட்பார்கள். அவர் அதற்கு, ''உங்கள் கடிதம் எனக்கு ஊக்கமளித்தது. என்னை உங்கள் குருவாக இருக்கும்படி கேட்டுள்ளீர்கள். ஆனால் ஒரு விஷயத்தை நீங்கள் புரிந்து கொள்ள வேண்டும். உங்கள் கடிதத்தில் நீங்கள் துறவறம் வேண்டும் என்று குறிப்பிட்டுள்ள விஷயத்தின் சக்தி என்னை

மிகவும் வசீகரித்துவிட்டது. அந்த விஷயம் என்னை மிகவும் கவர்ந்தது. அதனால்தான் உங்களோடு நடந்து பயணிக்கத் தயாராக உள்ளேன். உங்கள் பயணத்தை எளிதாக்குகின்றேன். ஆனால் குரு எனும் பதவியை ஏற்றுக் கொள்ள மாட்டேன். ஆனால் உங்களோடு பயணிக்கின்றேன்'' என்று பதில் எழுதுவார்.

ஆனால் இன்று நாம் வாழும் உலகில் அனைவரும் குருவாக மாற ஆசைப்படுகின்றார்கள். அதே சமயம் ஒரு புகழ்பெற்ற குருவின் சீடராக இருக்க அனைவரும் ஆசைப் படுகின்றனர். சுவாமிஜி சிவானந்தாஜி எந்த ஒரு சமயத்திலும் அவ்விதம் இருக்க வேண்டித் தன்னை வெளிப்படுத்திக் கொண்டதில்லை.

மக்கள் கைகளில் பணத்தோடு வந்தால், ஆஸ்ரமத்தில் எத்தகைய பணத்தட்டுப்பாடு இருந்தாலும் அவர் ஐந்து நிமிடத்திற்குள் மொத்தப் பணத்தையும் பட்டுவாடா செய்து விடுவார்.

அவர் ஆஸ்ரமத்தை எவ்வித வரவு - செலவு திட்டமின்றி நடத்தினார். 1936-ஆம் ஆண்டு ஜனவரி மாதம் துவங்கிய ஆஸ்ரமத்தில் வைப்பு நிதி வெறும் ரூபாய் முன்னூறு மட்டுமே! அன்றைய காலகட்டங்களில் ஆஸ்ரமத்தின் தினசரி செலவுகளுக்குப் பணம் கிடையாது. இன்று ரூபாய் 300/- என்பது நமக்கு மூக்குப் பொடி வாங்கக்கூட போதாது.

ஆனால் அன்று அந்த மஹாகுரு இதைப் பற்றி சிறிதும் சிந்தனையின்றி, எவ்விதக் கவலையுமின்றி இருந்தார். அவரைப் பின்பற்றி வரவேண்டும் என்று எண்ணுபவர்களிடம் ஒரு விஷயத்தைத்தான் மீண்டும் மீண்டும் வலியுறுத்தினார். ''டிவைன் லைஃப் சொஸைட்டி துவங்க இரண்டு பேர்தான் தேவை. ஒருவர் நீங்கள், மற்றொருவர் இறைவன். இவர்கள் இரண்டு பேர் இருந்தால் உடனே கிளையைத் துவக்குங்கள்'' என்று கூறுவார்.

இன்று நமக்கு செயலாளர், அறக்கட்டளையாளர்கள், ஆபீஸ் நடத்துபவர்கள், உயர் பதவியாளர்கள், அரசாங்கத்தில்

தெரிந்தவர்கள் என்று பலர் தேவை. ஆனால் ஸ்ரீ சிவானந்தா சுவாமிஜிக்கு இரண்டு பேர்தான் ஒரு பெரிய ஸ்தாபனத்தை துவக்கத் தேவை. ஒன்று நீங்கள், மற்றொன்று கடவுள். அவர் இதை நடத்திக் காட்டினார்.

சென்னையில் ராமகிருஷ்ண மடத்தைச் சார்ந்த சுவாமி ராமகிருஷ்ணானந்தாஜியும் இது போன்றே கூறினார். ''நான் உங்கள் உதவியாளராக இருக்கிறேன். உங்களுடன் ஒரு யாத்ரீகனாக புண்ணியத் தலங்களை தரிசிக்க வருகிறேன். ஆனால் உங்கள் குருவாக அல்ல!'' என்று அவரும் கூறுவார். சுவாமி ராமகிருஷ்ணானந்தாஜியும் எவ்விதத் திட்டங்களின்றி தான் மடத்தை நடத்தினார். திட்டங்களின்றி இவ்வுலகில் எப்படி வாழ்வது? அவர் அதை நடத்திக் காண்பித்தார்.

சுவாமி சிவானந்தாஜி தன் குடீரத்தில் முதன்முதலாகக் காணும் மனிதர் அவருடைய அறையை சுத்தம் செய்பவரைத் தான். சுத்தம் செய்பவர் அறைக்குள் ஒரு துடைப்பத்துடன் உள்ளே வருகையில் சுவாமிஜி ஒரு பூவை எடுத்து அவர் தலையில் வைப்பார். தொழிலாளியின் காலில் வணங்கி ''ஓம் நமோ நாராயணாய'' என்று கூறுவார்.

அவர் தன் கண்களைக் கொண்டு, தன் எதிரில் நிற்கும் இறையாண்மையைக் கண் குளிரக் கண்டு, அந்த இறையாண்மை அக்கணத்தில் தன்னைச் சுற்றியுள்ள வெளிப்புற சுற்றுச் சூழலை சுத்தம் செய்ய மனித உருவில் வந்துள்ளது என்று உணர்ந்து கொள்வார். தன் முடியை வெட்டும் தொழிலாளி, துணிகளைத் துவைக்கும் வண்ணான், தன் உதவியாளர்கள் என்று அனைவரிடமும் இதை உணர்ந்து ஒவ்வொருவரையும் வணங்குவார்.

ஒரு கண் அசைவிலேயே முழு ஆஸ்ரமத்தை நடத்தக்கூடிய இவர் என்றும் உத்தரவுகளை இட்டதில்லை, அதிகாரத்தை உபயோகப்படுத்தியதில்லை.

சுவாமி கிருஷ்ணானந்தாஜி மஹராஜ், ''சுவாமி சிவானந்தாஜியுடன் பணிபுரிவது என்பது மிகக் கடினமானது. அது அவர் இடும் கட்டளைகளினால் அல்ல, கட்டளைகளைப் பிறப்பிக்காமல் அவர் இருப்பதினால் தான்'' என்று கூறுவார்.

சுவாமி கிருஷ்ணானந்தா மஹராஜ் ஆஸ்ரமத்திற்கு தட்டெழுத்தாளராக வந்தார். பனாரஸில் இருக்கும் குரு தேவரின் நண்பர் ஒருவரால் கிருஷ்ணானந்தாஜி அனுப்பப் பட்டார். சுவாமி கிருஷ்ணானந்தாஜி ஆஸ்ரமத்திலேயே மிகச் சிறந்த தட்டெழுத்தாளராக இருந்தார். அவர் எழுதுவதில் மிகத் தெளிவாக இருந்தார். அவர் தட்டெழுத்து இயந்திரத்தில் அடிக்கும் வேகம் மிக அதிகமாக இருந்தது.

தவறுகளே இல்லாமல், அடித்தல் திருத்தலின்றி, சரியான நிறுத்தல் குறியீடுகளுடனும் அவருடைய பணி நிறைவாக இருக்கும். இவற்றையெல்லாம் மீறி அவர் எழுதுகையில் பத்திகள் ஒரே அளவில் இருக்கும்! அதுதான் சுவாமி கிருஷ்ணானந்தாஜி!

கிருஷ்ணானந்தா சுவாமிஜி, கிட்டத்தட்ட பன்னிரண்டு வருடங்கள் சாஸ்திரப் புத்தகங்களை மட்டுமே படித்துக் கொண்டிருந்தார். வேறு எந்த வேலையும் அவருக்கு அளிக்கப்படவில்லை. அவ்வப்பொழுது குருதேவர் வந்து ''கிருஷ்ணானந்தாஜி! உங்கள் உடல்நிலை எப்படியுள்ளது?'' என்று கேட்பார். ''நான் நன்றாக இருக்கிறேன்'' என்று பதில் கூறுவார்.

ஒரு குரு தன் சீடனின் உடல் நிலையைப் பற்றிப் பேசுகிறார். ''நீ என்ன நன்றாக இருக்கிறாய்? நீ ஏன் நெய் சாப்பிடுவதில்லை?'' என்று கேட்பார். சிறிதளவு நெய், மற்றும் சில பிஸ்கட்களும் தருவார்கள். 'மேரி பிஸ்கெட்' என்பது அந்தக் காலத்தில் பெயர் பெற்றதாகும். (அதை சாப்பிட சாப்பிட அது பிடிக்காமல் போய்விடும்) பிறகு ஒரு சில சுவிட்சர்லாந்து நாட்டு பக்தர்கள் அளிக்கும் சாக்லேட்டுகள் கிருஷ்ணானந்தாஜிக்கு அளிக்கப்படும்.

கிருஷ்ணானந்தா சுவாமிஜி முட்டையைக் கையால் கூட தொடமாட்டார். ஒருவேளை சாக்லேட்டுகளில் முட்டை போட்டிருக்கக் கூடுமோ எனும் எண்ணத்தில் அவர் சாக்லேட்டுகளைக் கைகளால் தொடமாட்டார். ஆனால் குருதேவர் ''கிருஷ்ணா, இந்த சாக்லேட்டுகளை முகந்து பார்''

என்பார். பிறகு ''இதை வேறு யாருக்கும் தராதே. நான் உனக்குக் கொடுத்தேன். நீதான் எடுத்துக் கொள்ள வேண்டும்'' என்பார்.

ஆனால் கிருஷ்ணானந்தாஜி சாக்லேட்டுகளைத் தன் அறையில் வைத்திருப்பார். சாப்பிட மாட்டார். ஒருவேளை சர்க்கரை நோய் தனக்கு வர வேண்டாம் என்று நினைத்திருக்கலாம். நானாக இருந்திருந்தால் அதை மென்று முழுங்கியிருப்பேன். பிறகு எறும்புகளும், எலிகளும் அதைத் தின்றுவிடும்.

அப்படித்தான் ஆஸ்ரமம் இருந்தது. அதில் தேனீக் கூட்டில் உள்ளது போல இருந்தனர். திடீரென்று ஸ்வாமிஜி ''நீ அதை செய்து கொண்டிருக்கிறாயா?'' என்று கேட்பார். ''எதை?'' என்று கிருஷ்ணாஜி கேட்பார்.

''நான் உனக்குக் கொடுத்ததை நீ சாப்பிட்டியா?'' குருதேவர் கேட்டால், ''ஆமாம், ஆமாம் குருதேவ்'' என்று கூறிவிட்டு கிருஷ்ணானந்த ஸ்வாமிஜி கங்கையில் குதிப்பார். அவருக்குக் காலையும், மாலையும் கங்கையில் குளித்தே ஆகவேண்டும். தன் அறையைத் தானே சுத்தம் செய்து துடைப்பார். பிறகுதான் அறையில் உட்கார்ந்து கொண்டு படிப்பார்.

ஒருநாள் குருதேவர் அவரை அழைத்து ''என்னிடம் சில காகிதங்கள் உள்ளன. அவற்றை நன்கு 'டைப்' செய்ய வேண்டும். உனக்கு வார்த்தைகள் நன்றாகத் தெரியும். அதை மாவட்ட நீதிபதியிடம் தரவேண்டும். ஒரு சில பிரச்சனைகள் இருக்கின்றன. அதை உன்னால் தீர்க்க முடியும் என்று எண்ணுகிறேன்'' என்பார்.

''சரி குருதேவ், சரி குருதேவ்'' என்று கிருஷ்ணானந்தஜி கூறுவார். ''என்ன சரி, சரி. உனக்கு முடிந்த சமயத்தில் செய்'' என்பார் குருதேவர்.

காலையில் எட்டு மணிக்கு குருதேவர் வந்து பணியை ஒப்படைத்து விட்டு, 10 மணிக்கு ஒரு கோப்பை பால் அனுப்புவார். 12 மணி மதியம் யாரையாவது அனுப்பி ''நான்

கொடுத்த பணியை செய்கிறாயா?'' என்று கேட்டுத் தெரிந்து கொள்வார். மாலை 4 மணிக்கு ''வேலை முடிந்ததா?'' என்று கேட்பார். காலை 9 மணிக்கு ''உனக்கு இயன்ற நேரத்தில் பணியைச் செய்'' என்றவர் அதே குருதேவர் தான்!

குருதேவரிடம் பணி செய்வது சுலபமல்ல. ஆனால் அவர் அளிக்கும் கட்டளைகள் சீடர்களின் உணர்வுகளை, சுயமரியாதையை எந்தச் சமயத்திலும் துன்புறுத்தாது.

ஒரு குரு என்பவர் தன் சீடர்களை கட்டளையிட்டு விரட்டுபவர் அல்ல. ஒரு குருநாதர் சீடர்களின் கஷ்டங்களைப் புரிந்து கொண்டு நடந்து கொள்வார். சரியான தருணத்தில் அந்த மனிதனைத் தட்டிக் கொடுத்து, முன்னேற்றமளித்து, சேற்று நிலம் போன்ற எண்ணங்களிலிருந்து உயரே தூக்கி, மென்மையாக அடுத்த பாதையில் இறக்குவார்.

அது போன்ற ஓர் ஒளி நிறைந்த மருத்துவர்தான் சுவாமி சிவானந்தாஜி மஹராஜ்.

எங்களைப் போன்றவர்களால் குருதேவரிடம் அதிக நாள் இருக்க இயலவில்லை என்றாலும், அவரைப் பற்றி நிறையப் படித்திருக்கின்றோம். அவரோடு வாழும் பாக்கியம் எங்களுக்குக் கிட்டவில்லை. எப்பொழுது சுவாமி கிருஷ்ணானந்தாவிடம் குருதேவரைப் பற்றிக் கேட்டாலும், அவருடைய தொண்டை அடைத்து, பேச இயலாமல் தவிப்பார்.

எதை நீங்கள் மிக அதிகமாக விரும்புகிறீர்களோ அதைப் பற்றி அதிகம் பேச இயலாது. நீங்கள் எதை அதிகமாக விரும்பவில்லையோ அதைப் பற்றி மணிக்கணக்காகப் பேசலாம். அழகான மொழியில் தெளிவாகப் பேசிப் புரிய வைக்கலாம். ஆனால் அன்பு, முழுமையான பக்தி, ஒரு உண்மையான அடிப்படைக்கு முழு சரணாகதி. இதைப் பற்றிப் பேச வேண்டும் என்றால் இயலாது.

குருதேவரைப் பற்றி அறிய வேண்டும் என்று நினைக்கும் பொழுதெல்லாம் இந்த எண்ணங்கள் எங்களுக்குள் தோன்றின.

எங்கள் குருமார்களைக் கண்களின் எதிரில் நாங்கள் காண்பதால் அவர்களிடம் குறும்பு விளையாட்டுக்கள் பல செய்வோம் என்றாலும் குருதேவர் சிவானந்தாஜியிடம் இவர்கள் எப்படி நடந்து கொண்டார்கள் என்று அறிய ஆசைப்பட்டோம்.

பலர் எங்களிடம் எதையும் விவரமாகக் கூற மாட்டார்கள். ஆனால் சுவாமி தயானந்தாஜி மஹராஜிடம் ''சுவாமிஜி, குருதேவரைப்பற்றி ஏதாவது கூற இயலுமா?'' என்று நான் கேட்டபொழுது ''அவரைப் பற்றி எதைக் கூறுவது? அவர் ஓர் முழுமையான பகவான். அதைத் தவிர வேறு எதையும் கூற இயலாது.'' ஒரே ஒரு வார்த்தை! அவ்வளவுதான்!

இப்படிப்பட்ட வார்த்தைகளை அவர்கள் கூறுகையில் குருதேவரைப்பற்றிப் புரிந்து கொள்ள வேண்டும்.

குருதேவரின் எளிமையை பற்றிக் கூறவேண்டும் என்றால் நீங்கள் எதைச் செய்தாலும் அது இறையுணர்வுடன் ஒன்ற வேண்டும். அதைத்தான் அவர் எதிர்பார்த்தார். நீங்கள் ஒரு வடையை சாப்பிடுகின்றீர்கள் என்றால் உடனே குருதேவர் ''வடையா? ஸ்ரீனிவாசனைப் பற்றிப் பாடிவிட்டு அதைச் சாப்பிடு'' என்று கூறுவார். இறையுணர்வு இன்றி ஒரு வடையைக் கூட சாப்பிடக்கூடாது என்பார்.

'டிவைன் லைஃப் சொஸைட்டி' உங்களை இறையுணர்வில் கரைத்து விடும் மனிதராக மாற்றி விடவேண்டும் என்பார்.

நீங்கள் ஒரு மடாலயத்திலிருந்து வெளியேறுகையில், ஒரு விளக்க முடியாத சுற்றுச் சூழலிலிருந்து வெளியேறுகின்றீர்கள். அங்கு உள்ளே செல்லும்பொழுது குழப்பம், உங்கள் சாமான்கள் என்று கொண்டு செல்கின்றீர்கள். உள்ளே வந்த பிறகு எவ்வித ஆன்மீக சாதனையும் செய்யவில்லை எனினும், அந்த இடத்திலிருந்து நீங்கள் வெளியேறும் பொழுது லேசான மனதுடன் வெளியேறுகின்றீர்கள். ஒரு இனிமையான தன்மையுடன் வெளியேறுகின்றீர்கள். உங்களிடம் ஏதோ ஒரு இறையாண்மை சக்தி வந்துள்ளது அல்லது ஆசீர்வதிக்கப்பட்டுள்ளது என்று நிச்சயமாக உணர்கின்றீர்கள்.

இந்த உணர்வை சுவாமி சிவானந்தாஜி மஹராஜ் எப்பொழுதும், இன்றும் எப்படிப்பட்ட துன்பச் சுமைகளுடன் யார் வந்தாலும் அளிக்கின்றார்.

1947-ஆம் ஆண்டு, இந்திய நாடு இரு கூறாகப் பிரிக்கப் பட்ட பொழுது, பாகிஸ்தானிலிருந்து எண்ணற்ற அகதிகள் வந்தனர். அவர்களுடைய அன்புக்குப் பாத்திரமானவர்கள் உற்றார், உறவினர்கள் என்று பலரை இழந்தவர்கள் வந்தனர்.

பாகிஸ்தானிலிருந்து இந்திய எல்லைக்கு வந்த இரயிலில் 4000த்திற்கும் மேற்பட்ட மனிதர்கள் கொல்லப்பட்டனர். பலர் தில்லியிலிருந்து குருதேவரிடம் வந்தனர்.

டிவைன் லைஃப் சொஸைட்டிக்கு என்று தனியான சத்திரம் ஒன்று உண்டு. அது பஞ்சாப் மாநிலத்தில் பதிவு செய்யப்பட்ட சொஸைட்டியாகும்.

கராச்சி மாநகரில் சுவாமிஜி 'சங்கீர்த்தன் சாம்ராட்' என்று அழைக்கப்பட்டார். இந்தியத் திருநாட்டில் உத்திரபிரதேசத்தில் அவர் புகழ் வாய்ந்தவர் ஆவார். அதனால் அவருக்கு முக்கோண பிணைப்பு பாதிக்கப்பட்ட மக்களுடன் இருந்தது.

சுவாமி சிவானந்தா பாதிக்கப்பட்டவர்களைக் கண்டு "கவலைப்படாதீர்கள். அடுத்து வரும் இரயிலில் அல்லது கப்பலில் அவர்கள் வந்து விடுவார்கள்" என்று கூறுவார். அவரிடம் சென்று "என் சொந்த பந்தத்திற்கு என்ன ஆயிற்றோ என்று தெரியவில்லையே" என்று கதறுபவர்களிடம் சுவாமிஜி எளிமையாக "இந்த மனிதர் இப்பொழுது வருவார். உங்கள் கதவைத் தட்டுவார்" என்று கூறுவார்.

சுவாமிஜி கூறியபடியே பலமுறை நடந்துள்ளது. பன்னாலால் என்பவரின் குடும்பத்தாரிடம் சுவாமிஜி மிக எளிமையாக "நீங்கள் தேடுபவர், உங்களுடைய சுற்றத்தார் நிச்சயமாக வருவார்" என்று கூறியுள்ளார். அதன்படியே அவர்கள் வந்து கதவைத் தட்டியுள்ளார்.

பிறகு ஒரு கால கட்டத்தில் கணவன், மனைவி இருவரும் சந்நியாசம் பெற்றுக் கொண்டார்கள். ஆனால் அது வேறு கதை.

எங்களைக் கேட்டால் மணிக்கணக்கில் அவர்களைப் பற்றிக் கூறுவோம்.

ஆனால் நாம் மிக முக்கியமாகக் காண வேண்டியது, குருதேவரிடம் இருந்த மிக, மிக நுட்பமான பார்வை. அவரால் கடந்த காலம், மற்றும் எதிர்காலத்தைக் காணும் சக்தி இருந்தது. அதை நிகழ் காலத்தில் அவரால் கண்டு கொள்ள முடிந்தது.

இத்திறனை வெளியுலகத்திற்குத் தன் சக்தியை பிரகடனப் படுத்த அவர் உபயோகிக்கவில்லை. ஆனால் வெளிப்புறத்தில் உள்ள அனைத்தையும் தன்னோடு இணைக்கும் உயர்ந்த சக்தி கொண்ட குருவாக அவர் இருந்தார்.

ஒரு சாதாரண மனித மனம் ஒப்புக்கொள்ள மறுக்கும் விஷயத்தை அவரால் தெளிவாகக் காண முடிந்தது.

45 பேர் ஒரு ஊர்தியில் கிளம்பி தில்லிக்கு வந்தனர். அந்நேரத்தில் ஆஸ்ரமத்தில் அவர்களுக்கு உணவு படைக்க பணமில்லை. அதனால் அவர்கள் காளிகம்பலிவாலா அல்லது பஞ்சாபி தர்மசத்திரத்திற்கு ரொட்டி உணவு உண்ணச் செல்ல வேண்டியிருந்தது.

சுவாமி சிவானந்தாஜி எப்பொழுதும் ''என்னுடைய சீடர்கள் ஒரு கல்லைக் கூட தின்று ஜீரணிக்க வேண்டும். அதுவும் கிடைக்கவில்லையெனில் 'ஹரே ராமா' என்று பாடிக்கொண்டே மற்ற அன்னதான சத்திரங்களில் சென்று சாப்பிடப் பழகவேண்டும். அனைத்திற்கும் நீங்கள் தயாராக இருக்க வேண்டும். அப்படியிருந்தால்தான் துறவறத்தின் பாதையில் நடக்க இயலும்'' என்று கூறுவார்.

45 பேர் வந்து ஆஸ்ரம வாயிலில் நின்றபொழுது சுவாமிஜியின் சமையல் பணிகளைக் கவனிக்கும் சுவாமி கோவிந்தானந்தாஜி ''குருவே, ஆஸ்ரமத்தில் எதுவுமே இல்லை. அவர்களுக்கு என்ன அளிப்பது?'' என்று கேட்டார். சாதாரண கிச்சடிகூட செய்ய இயலவில்லை.

ஒரு அரிசிமணிகூட அங்கு அன்று கிடையாது. கோவிந்தானந்தாஜி சுவாமிஜி மிகவும் வயதானவர். நான்

அவரைப் பார்த்துப் பேசியிருக்கிறேன். ஆனால் அவர் மிகுந்த மதவைராக்கியமுள்ளவர். சுவாமிஜி குருதேவரின் அருகில் யாரையும் அண்டவிடமாட்டார். அவர் பாயசம் தயாரித்து குருதேவருக்கு அளிக்கையில், குருதேவர் மற்றவர்களோடு அதைப் பங்கிட வேண்டும் என்று எண்ணினால், கோவிந்தானந்தாஜி உடனே அதில் உப்பு போட்டு, மற்றவர்கள் அருந்தாதபடி பார்த்துக் கொள்வார். 'நான் தயாரிப்பது குருதேவருக்கு மட்டும்தான். மற்றவர்கள் அதை அருந்த வேண்டும் என்று எண்ணினால் அவர்களுக்கு குருதேவர் அனுபவித்த இனிப்புச் சுவை கிடைக்கக்கூடாது' என்று எண்ணுவார்!

இப்படிப்பட்ட ஒரு பக்தி! பல்வேறு வகையான பக்தர்கள் ஆஸ்ரமத்தில் இருந்தனர்.

வந்திருந்த விருந்தினர்களை குருதேவர் ''கங்கையில் சென்று குளியுங்கள். பிறகு வந்து மதிய உணவு சாப்பிடுங்கள்'' என்று கூறிக்கொண்டிருக்கையில் கோவிந்தானந்தா சுவாமிஜி சென்று ''ஆஸ்ரமத்தில் எதுவுமேயில்லை'' என்றார். ''ஏன் அப்படி கூறுகிறாய்? 45 மனிதர்கள் இங்கு பட்டினி கிடக்கவா வருகின்றார்கள்? நிச்சயமாக இல்லை. ஏதோ ஒரு காரணம் உள்ளது. இல்லையெனில் இங்கு ஏன் வரவேண்டும்? அவர்கள் இங்கு வருவதற்கு ஏதோ ஒரு காரணம் உள்ளது. அவர்கள் கங்கையில் குளித்துவிட்டு வரட்டும். நாம சங்கீர்த்தனம் பாடிவிட்டு இங்கு வரட்டும். ஏதாவது சமைப்பதற்குக் கிடைக்கும்'' என்றார்.

ஆனால் கடந்த இரண்டு நாட்களாகவே, சமைப்பதற்கு எதுவுமில்லை. ஆஸ்ரமத்தில் உள்ள அனைவரும் எதிரில் உள்ள சத்திரத்திற்குச் சென்றுதான் சாப்பிட்டுக் கொண்டிருந்தார்கள். அவர்கள் கிடைத்த ரொட்டியை கங்கை நீரில் முக்கி, குருதேவர் தவம் செய்து கொண்டிருந்த காலத்தில் செய்தது போன்று செய்து சாப்பிடவில்லை.

ஆஸ்ரமத்தில் உள்ளவர்கள் எதிரில் உள்ள சத்திரத்தில் ரொட்டியுடன் நல்ல உருளைக்கிழங்கு பொரியல் சாப்பிட்டுக்

கொண்டிருந்தனர். உருளைக்கிழங்கு ரிஷிகேஷத்தில் நிறைய கிடைக்கும்.

அது மட்டுமல்ல, இப்படிப்பட்ட வஸ்திரத்தை அணிந்து கொண்டு சென்றால் போதும், சாப்பாடு நன்றாகக் கிடைக்கும். இந்தியாவில் யாரும், எந்த சாதுவும் உணவின்றி இறப்ப தில்லை. அவர்கள் அதிக உணவு உண்டுதான் இறக்கின்றார்கள்.

கோவிந்தானந்தா சுவாமிகளுக்கு கடுமையான கோபம். ஏனெனில் அவர்தான் மூத்த சமையல் கலைஞர் மற்றும் குருதேவரின் சமையல் கலைஞர். அவரே கூறுகிறார், எதுவுமே இல்லையென்று. ஆனால் குருதேவர் குடியா கிருஷ்ணனிடம் ''நீ சென்று தேடு. அங்கு ஏதாவது இருக்கும். இல்லையெனில் ஏன் நாற்பத்தைந்து பேர் இங்கு வரவேண்டும்? அவர்கள் எல்லோருக்கும் இங்கு டிவைன் லைஃப் சொஸைட்டியில் வந்து பட்டினி கிடக்க வேண்டும் என்று பொதுவான கர்மாவா? வேறு ஏதோ ஒரு விஷயம் உள்ளது'' என்று கூறிவிட்டார்.

கடைசியில் அனைவரும், குருதேவர் சொல்லிவிட்டார், அவரிடம் முடியாது என்று கூற முடியாது அல்லவா என்று உணவுப் பொருளைத் தேடிச் சென்றனர்.

முனிகா ரேத்தி எனும் இடத்தில் உள்ள ஒரு காட்டில் ஒரு மூட்டை அரிசி கிடந்தது. பஞ்சாப் மாநிலத்து விவசாயிகள் ஆஸ்ரமத்திற்கு ஒரு மாட்டு வண்டியில் வந்து நிறைய அரிசி மூட்டைகள் அனுப்புவார்கள். அச்சமயத்தில் ஏதோ ஒரு மூட்டை கீழே விழுந்து விட்டது. அதைப் பற்றி அவர்கள் அறியவில்லை; ஏனெனில் யாரும் தானாகக் கொடுப்பதை எண்ணுவதில்லை. தானம் என்றால் அவர்கள் அப்படியே தந்து விடுவார்கள்.

அவர்கள் ''இருபது மூட்டை அரிசி, டிவைன் லைஃப் சொஸைட்டிக்கு. ஒரு மூட்டை இத்தனை விலையில் 20 மூட்டைகளுக்கு ரஸீது கொடுங்கள். அப்பொழுதுதான் வருமான வரித்துறைக்கு அனுப்ப இயலும்'' என்றெல்லாம் அன்று கூறியதில்லை.

எப்படியோ கீழே ஓரத்தில் கிடந்த அரிசி மூட்டையை சுவாமி குடியா கிருஷ்ணா கண்டுபிடித்து குருதேவரிடம் கூறினார். உடனே குருதேவர் ''இங்கு பட்டினி கிடக்க யாரும் வரமாட்டார்கள் என்று எனக்குத் தெரியும். யாருமே பட்டினி கிடக்க மாட்டார்கள். இனி அருமையான கிச்சடி பொங்கலை செய்யுங்கள்'' என்றார்.

''ஆனால் அது சமைக்க நேரமாகும் என்பதால் நாம் ஒரு சத்சங்கத்தை நடத்துவோம்'' என்று கூறிவிட்டு வந்திருக்கும் ஒவ்வொருவரும் ஐந்து நிமிடத்திற்கு ஒரு பாடல் பாடும்படி கூறினார். அப்பொழுது 45 பேர், தலா 5 நிமிடம் என்று பாடி முடிப்பதற்குள் கிச்சடி தயாராகிவிட்டது.

அதுதான் துறவறத்தின் ஆணிவேர். இறைவனின் முழு சக்தியையும், அவன் நீக்கமற இருப்பதையும், எல்லா நேரத்திலும் உணர்ந்தவர். வந்தவர்கள் உணவின்றிப் போக முடியாது என்பதை முழுமையாக உணர்ந்தவர்.

ஏதோ ஒரு அடிப்படைக் கொள்கை நம்மைத் தாண்டி செயல்படுகின்றது. அந்த தர்மம் நம்முடைய மற்ற கர்மாக்களை நீக்கிவிடும். ஏனெனில் தொடர்ந்து இறைவனை பூஜிக்கும் இடத்திற்கு வந்து விட்டார்கள்.

சுவாமி சிவானந்தாஜி டிவைன் லைஃப் சொஸைட்டியில் 'விஸ்வநாத மந்திர்' எனும் கோயிலை ஒரு நல்ல நாளில் ஆரம்பித்தார். ஒரு கோயிலைக் கட்டும் பொழுது அதற்கென்று சில நிகழ்ச்சிகள் அதனுடைய தொடர்பாக செய்தாகவேண்டும். கோயிலை நிர்மாணித்தல், புனிதச் சடங்கு மற்றும் அனைத்து புனித நாட்களையும் கவனத்தில் கொள்ள வேண்டும்.

விஸ்வநாத மந்திர் புனித நேரமற்ற ஒரு நேரத்தில் சுவாமி சிவானந்தா மஹராஜ் அவர்களால் துவங்கப்பட்டது. மெத்தப் படித்த பல பண்டிதர்கள் ''சுவாமிஜி, நீங்கள் ஒரு பெரிய தவறைச் செய்கின்றீர்கள். ஆஸ்ரமம் இடிந்துவிடும்'' என்று கூறினார்கள்.

''அதைப் பற்றிக் கவலைபடாதீர்கள். இந்த எண்ணம் எனக்கு வந்தது. நான் ஆணவக்காரனல்ல. உங்கள் அறிவுக்

கூர்மையைப் புரிந்து கொள்கின்றேன். உங்கள் அறிவுரையைப் பெரிதும் மதிக்கின்றேன். ஆனால் இந்த எண்ணம் வந்து விட்டது. இறைவன் என்னிடம் வந்து கோயிலை இந்த நேரத்தில் திறந்துவிடு என்கிறார். அதனால் இப்பணியைச் செய்கின்றேன். அது தோல்வி அடைந்தால்... போகட்டும் எனக்கு எவ்வித பிரச்சனையும் இல்லை. ஆனால் இதற்கு மாறாக ஏதாவது ஒன்றை செய்தே ஆகவேண்டும். ஏனெனில் நாம் இயற்கையின் சக்திக்கு எதிராக, ஜோசிய சாஸ்திரத்திற்குப் புறம்பாக, தவறான நேரத்தில் கோயிலைத் துவங்குகிறோம். அதனால் நாம் ஒருதவம் செய்வோம். அதைத் தொடர்ந்து செய்வோம்'' என்றார்.

பிறகு 24 மணி நேரமும் தொடர்ந்து 'ஹரே ராமா' மந்திரத்தை விடாது ஜபிக்கத் துவங்கினார். இன்றும் ஒருவர் சென்று ஒரு மணிநேரம் ஜபம் செய்ய வேண்டும். அப்படி யார் செய்கின்றாரோ அவர் விபூதி, குங்குமம் இவற்றை சின்ன - சின்ன பொட்டலங்களாகக் கட்ட வேண்டும். ஒரு மணிநேரம் கழித்து அடுத்த மனிதர் வந்துவிடுவார். அவர் ஜபம் செய்து விபூதி - குங்குமப் பொட்டலம் கட்டவேண்டும். இப்படியாக இருபத்திநான்கு மணிநேரமும் தொடர்ந்து நடை பெறு கின்றது. இன்றுவரை கடந்த 65 ஆண்டுகளாக தொடர்கின்றது.

பல வருடங்கள் ஆன்மீக ரீதியில் இப்படிப்பட்ட பணிகளைத் தொடர வேண்டும் என்றால் இவற்றை அவர்கள் மனதில் புகுத்தும் அந்த மாமனிதர் எப்படிப்பட்டவராக இருக்க வேண்டும். மதம் என்பதைப் பின்பற்றுவது வேறு, ஆன்மீக உணர்வை ஏற்றுக்கொள்வது என்பது வேறு. மத ரீதியாக இதைத்தான் செய்ய வேண்டும் என்று கூறுவோம். ஆனால் ஆன்மீகம் என்பது இத்தகைய கட்டுப்பாடுகளையெல்லாம் தாண்டிச் செல்கின்றது.

சுவாமி சிவானந்தா ஒவ்வொருவருக்கும் அனைத்தையும் அளிப்பவர். அவரிடம் பெற்றுக் கொண்டவர் அதை தவறாக உபயோகித்தால் அதைப் பற்றியோ அல்லது தன்னுடைய முடிவுகளைப் பற்றியோ அவர் கவலைப்பட்டதும் இல்லை.

ஒருமுறை ஓர் ஆஸ்திரேலிய நாட்டு சந்நியாசி சுவாமி சிவானந்தாஜி மஹராஜிடம் நேரில் வந்து சண்டை போட்டார். ''நீங்கள் எப்படி கண்மூடித்தனமாக அனைவருக்கும் சந்நியாசம் அளிக்கலாம்'' என்று கோபமாகக் கேட்டார்.

உலகிலேயே தபால் மூலமாக சந்நியாசமளித்த ஒரே குரு சிவானந்தாஜிதான்! யாராவது அவருக்கு கடிதம் எழுதி 'நான் சந்நியாசியாக வேண்டும்' என்று கேட்டால் உடனே ஒரு ஜபமாலை, யோகாசன புத்தகம், யோக சாதனை புத்தகம், இருபது ஆன்மீக கட்டளைகள் ஆகியவற்றை தபால் மூலம் அனுப்பிவிடுவார். உடனே தபால் - சந்நியாசம் கிடைத்து விடும்!

ஒரு சில காலகட்டத்திற்குப் பிறகு, அவர்கள் ''சுவாமிஜி, எங்களால் சந்நியாசத்தைப் பின்பற்ற இயலவில்லை. நாங்கள் கிருஹஸ்தர்களாக மாற விரும்புகிறோம்'' என்று கடிதம் எழுதுவார்கள். உடனே சுவாமிஜி அவர்களை வாழ்த்தி பதில் எழுதுவார்.

இதைக் கண்டு ஆஸ்திரேலிய நாட்டு சுவாமிஜி சுவாமி சிவானந்தாஜியைப் பார்த்து ''நீங்கள் ஏன் சகட்டுமேனிக்கு முதிர்ச்சியடையாதவர்களுக்கு சந்நியாசம் அளிக்கின்றீர்கள். சந்நியாசத்தின் மதிப்பு உங்களுக்குத் தெரியாததா? இப்படியெல்லாம் ஏன் செய்கின்றீர்கள்?'' என்று சண்டையிட்டார்.

உடனே குருதேவர் ''ஒரே ஒரு நாளாவது அவனுக்கு 'நான் இவ்வுலகைத் துறக்கிறேன்' என்று கூறும் தைரியம் வந்தது. உன்னால் அப்படிக் கூற இயலுமா? முடியாது. அப்பொழுது ஏன் குற்றம் குறை கூறுகின்றாய்? ஒருநாள், இரண்டு நாட்கள், ஐந்து நாட்கள், ஐந்து மாதங்கள், ஐந்து வருடங்கள் கழித்து அவன் தோல்வியுறுகிறான். அதைப் பற்றிக் கவலைப்படாதே. அடுத்த பிறவியில் அவன் நேரில் வந்து வெகுசீக்கிரமாகத் துறவறம் பெறுவான். ஆனால் இன்று அவனிடம் அந்த தைரியமிருந்தது. அவன் இன்று எப்படியிருக்கிறானோ அப்படி ஏற்றுக்கொள். கடந்தகால வாழ்க்கையைப் பற்றி எண்ணாதே. எதிர்கால வாழ்க்கையைப் பற்றி யோசிக்காதே. இன்று,

இக்கணம் 'துறவு' எனும் நெருப்பு அவனிடம் கனன்று எரிகின்றது. அவனை அப்படியே ஏற்றுக்கொள்'' என்றார்.

இன்று அரசாங்கத்திடம் ஒரு விண்ணப்பம் செய்தால் உடனே உங்கள் பின்னணி ஆராய்ந்து சரிபார்க்கப்படுகின்றது. அந்தப் பின்னணியை ஆராய மற்றொரு பின்னணி தேவைப் படுகின்றது. இப்படி வாழ்க்கை முழுவதும் எல்லாவற்றிற்கும் பின்னணி தோண்டிப் பார்க்கப்படுகின்றது. இது எங்கே, எப்படி முடியும்?

உங்களுக்கு வண்டியோட்டியின் அனுமதிச் சீட்டு (லைஸன்ஸ்) வேண்டுமென்றால் உடனே உங்கள் பின்னணி ஆராயப்பட்டு, ஒருவேளை உங்கள்மீது ஒரு குற்றப் பத்திரிகை இருந்தால் அது கவனிக்கப்படுகின்றது.

இன்றைய குற்றவாளி நாளை ஒரு சந்நியாசியாக மாறலாம். நாளைய சந்நியாசி மற்றொரு நாள் குற்றவாளி யாகலாம். நீங்கள் எதைச் சரிபார்க்க எண்ணுகின்றீர்கள்?

மனிதர்களுக்காக அவரிடம் கொட்டிக் கிடந்த அபரிமிதமான அன்பு நிர்மாணிக்கப்பட்ட சட்டங்களை உடைத்தெறிந்தது.

அவர் 'யோக வேதாந்த வனம் கல்வி சாலை' என்பதைத் துவங்கிய பொழுது, கிருஷ்ணானந்தா சுவாமிஜி மற்றும் வெங்கடேசானந்தா சுவாமிஜியின் முன்பு உட்கார்ந்து கொள்வார். அவர்கள் கூறுவதை உன்னிப்பாகக்கேட்டு ''நான் உங்கள் சீடன். பேசுங்கள்'' என்பார். அவர்கள் கூறுவதைக் குறிப்பெடுத்துக் கொள்வார். 'நானே பெரியவன்' எனும் சர்வாதிகார எண்ணம் கொண்ட குருநாதரால் தன் சீடரிடம் இப்படி இருக்க இயலாது.

அவர் நானும் ஒரு சீடன். நானே ஒரு குரு என்று எண்ணம் கொண்டிருந்தார். கற்றுத் தருபவரும், கற்றுக் கொடுப்பவரும் ஒருவரே. இதை அவர் மிகத் தெளிவாக நடத்திக் காட்டினார். அவர் எந்தக் காலத்திலும் ''சட்டங்களை நான் உடைத் தெறியலாம்'' என்று கூறியதில்லை.

ஓம் தத்சதானந்தா எனும் பெயரில் ஒரு சுவாமிஜி இருந்தார். அவர் இப்போது இறந்து விட்டார். குருதேவர்

அவரை காரியதரிசியாக மாற்ற எண்ணினார். குருதேவர் ஏறிட்டுப் பார்ப்பதற்குள் வெங்கடேசானந்தா ஒரு கடிதம் அச்சடித்துத் தந்துவிட்டார்.

''நான், ஸ்தாபகர், தலைவர் பிரெசிடெண்ட் சுவாமி சிவானந்த மஹராஜ், இன்னாரை டிவைன் லைஃப் சொஸைட்டியின் காரியதரிசியாக நியமிக்கிறேன்'' என்று கடிதத்தில் இருந்தது.

வெங்கடேசானந்தா சுவாமிஜியை குருதேவர் ஒரு பார்வை பார்த்தால் போதும். உடனே வெங்கடேசானந்தா புரிந்து கொள்வார். எதுவும் பேசப்படுவதில்லை. இது உத்தரவுப்படி கீழ்ப்படிதல் அல்ல. இது உடனுக்குடன் ஏற்படும் இணைப்பாகும். அதுதான் குருபக்தி என்பது.

ஐந்து நாட்கள் கழித்து ஓம் தத்சதானந்தா சுவாமி குருதேவரிடம் ''சுவாமிஜி, ஆஸ்ரமத்தில் ஒரு பெரிய பிரச்சனை, நான் அதை சரி செய்கிறேன்'' என்று கூறுவார். ''ஆமாம், அதனால்தான் உங்களை ஒரு செகரெட்டரியாக்கி னேன். என்ன செய்யப் போகின்றீர்கள்?'' என்று கேட்டார்.

உடனே ஓம் தத்சதானந்தா ''சுவாமிஜி, இந்த ஆஸ்ரமத்தில் நானூற்றி ஐம்பது பேர் உள்ளனர். அவர்களில் பலருக்கு இங்கு எந்த வேலையுமில்லை. அதனால் அவர்களை இங்கிருந்து அனுப்பிவிடவேண்டும்'' என்று ஏதோ ஒரு நிறுவனத்தில் பணிக்கு எடுப்பது, வெளியே அனுப்புவது போன்று கூறினார்.

அதற்கு குருதேவர், ''அப்படியா, நீ என்ன திட்டம் வைத்திருக்கிறாய்?'' என்று கேட்டார். ''சுவாமிஜி, அறுபது வயதிற்கு மேற்பட்டவர்களைத் திருப்பி அனுப்பிவிட வேண்டும்'' என்றார். ''சரி, ஒரு பெயர்ப்பட்டியலை எடுத்து வா. நாளை அவர்களைத் திருப்பி அனுப்பிவிடுகிறேன்'' என்றார் சுவாமிஜி.

மறுநாள் பட்டியல் வந்தது. இரவு முழுவதும் ஓம் தத்சதானந்தா அதை எழுதி முடித்தார். அந்தக் கால

கட்டங்களில் நீங்கள் டைப்ரைட்டரை உபயோகிக்க இயலாது. கைகளால் தான் எழுதவேண்டும்.

குருதேவர் பட்டியலைப் படித்துவிட்டு, ''எல்லா பெயர்களும் மிக சரியாக எழுதியிருக்கிறீர்கள் சார். ஆனால் என் பெயர் இல்லையே. என் வயது 63'' என்றார்!

மிகுந்த நகைச்சுவையுணர்ச்சி, அதோடு இணைந்து நல்ல பாடம் கற்பிப்பது என்பதுதான் குருதேவரின் தனித்துவம். அவர் இந்த இயக்கத்தினை நிறுவினார். பிறகு ஒருநாள் அவர் ''நான் இங்கு இருக்க வேண்டிய அவசியமில்லை'' என்று கிளம்பி 'ரூர்கி' எனும் ஊருக்குச் சென்று விட்டார். அவர் ஆஸ்ரமத்திற்குத் திரும்பி வருவதாகயில்லை.

மக்கள் அவரைத் தொடர்ந்து ஐந்து நாட்கள் தேடினார்கள். ஆறாவது நாள் யாரோ ஒருவர் ''ரூர்கி நகரில் ஒரு சாது உட்கார்ந்து கொண்டிருக்கிறார்'' என்றதும் அங்கு சென்று கேட்டனர். அவர் உடனே ''உங்களால் அந்த ஆஸ்ரமத்தைத் திறம்பட நடத்த இயலும். நான் தேவையில்லை'' என்று கூறினார்.

நீங்கள் எதைச் செய்தாலும் அது மற்றவர்களுக்காகச் செய்யாமல், உங்களுக்காகச் செய்தால் அதை எப்பொழுது வேண்டுமானாலும் துறந்து விடலாம். மற்றவர்களுக்காகச் செய்யாதீர்கள். உங்களுக்காகச் செய்துகொள்ளுங்கள். நீங்கள் சுலபமாகத் துறந்து விடலாம்.

குருதேவருக்கு வெளியே எதுவுமில்லை. அது தெளிவாகத் தெரிந்தது. அவர் துவக்கியது அவருடையது அல்ல. அது அவருடைய சொந்த சொத்து அல்ல. அவருடைய உரிமையல்ல. அதனுடன் அவருக்கு ஒட்டுமில்லை, உரிமையுமில்லை. அதனால் கண்சிமிட்டும் நேரத்தில் அதைவிட்டு வெளியே வந்து விட்டார்.

இதை நான் பிறகு சுவாமி கிருஷ்ணானந்தா மஹராஜிடமும் பார்த்து ரசித்துள்ளேன்.

எழுபதுகளின் கடைசியில் உத்திரப் பிரதேசத்தில் கவர்னராக டாக்டர் சென்னாரெட்டி என்று ஒருவர் இருந்தார்.

அவர் சிறிதும் இரக்கமற்ற, கடினமான அரசியல் தலைவர். அவர் இறைவனிடம் பயம் கொண்டவராக இருந்தாலும், அவரும் இறைவனை அரசியல் தலைவர்கள் செய்வது போல, எப்பொழுதாவது தொழுவார்.

அவர் ஒரு சமயத்தில் உத்திரப் பிரதேச அரசாங்கத்திற்கு ஒரு சிலவற்றை பரிந்துரைத்தார். ஆஸ்ரமம் உத்திர பிரதேச எல்லைக்குள் இருந்ததால் அக்கட்டளைக்குக் கீழ்ப்படிய வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. (தற்சமயம் ஆஸ்ரமம், உத்திரகண்ட் மாநிலத்தின் கீழ் உள்ளது.)

நாட்டின் பிரதம மந்திரி அலுவலகம் வழியாக ஒரு கடிதம் அனைத்து ஆஸ்ரமங்களுக்கும் அனுப்பப்பட்டது. ஆஸ்ரமங்களில் மிக அதிகமான சொத்து சேகரிப்பு உள்ளது. வரவு, கணக்குகளில் தவறுகள் உள்ளன. அதனால் ஆஸ்ரமங்களை அரசாங்கமே எடுத்து நடத்த வேண்டும் என்று கூறப்பட்டது. இதனைக் கையில் எடுத்து சாரிடி கமிஷனர் மூலமாகக் கட்டுப்படுத்த வேண்டும். பரமார்த் நிகேதன், கீதாபவன் போன்று பல ஆஸ்ரமங்களுக்கு இக்கடிதம் அனுப்பப்பட்டது. உத்திரகண்ட மாநிலத்தைச் சேர்ந்த ஹரித்துவார், ரிஷிகேஷ், மற்றும் உத்திரகாசியிலுள்ள ஆயிரக்கணக்கான ஆஸ்ரமங்களுக்கும் இக்கடிதங்கள் அனுப்பப்பட்டன. முக்கியமான பல புகழ்பெற்ற ஆசிரமங்கள் கோடிக்கணக்கான அளவில் சொத்துக்களைக் கொண்டிருந்தன. ஆகையால் ஆஸ்ரமங்களைத் தங்கள் கட்டுப் பாட்டிற்குக் கொண்டு வர அரசாங்கம் எண்ணியது.

நான் அந்தக் காலகட்டத்தில் ஸ்வாமிஜியுடன் ஆஸ்ரமத்தில் பணி செய்து கொண்டிருந்தேன். அரசாங்கம் அனுப்பிய கடிதத்தை நிர்வாகக் காரியதரிசியின் அறையில் பார்த்தேன். இரண்டு நாட்களுக்குப் பிறகு, பல ஆஸ்ரமங்களைச் சார்ந்த நிர்வாகிகள் ஒரு கூட்டம் போட வேண்டும்; அதில் அரசாங்கத்தை எப்படி எதிர்கொள்ளவேண்டும் என்று யோசிக்க வேண்டும் என்றனர்.

உடனே ஸ்வாமிஜி ''நான் எந்தக் கூட்டத்திற்கும் செல்லப் போவதில்லை. நான் ஒரு கடிதத்தை நேரடியாக

அனுப்பப் போகிறேன். ஏனெனில் அரசாங்கம் எனக்குத்தான் கடிதத்தை அனுப்பியுள்ளது. அவர்கள் ஆஸ்ரமங்களின் சங்கத்திற்கு அனுப்பவில்லை. ஏனெனில் ஆஸ்ரமங்களுக்கு சங்கம் என்பது கிடையாது. அவர்களுக்கு இறைவனோடு மட்டுமே சங்கமம் உண்டு'' என்றார்.

இதைக் கூறிய குருதேவர் ஒரு கடிதத்தை எழுதினார். அக்கடிதத்தில் அவர் எழுதிய விஷயங்களை என் ஞாபக சக்திக்கு ஏற்றவாறு உங்கள் முன் வைக்கிறேன். ஏனெனில் அதை மீண்டும் நினைவு படுத்திக் கொள்வதால், குரு தேவரின் உன்னதமான புகழைப் பெருமைப்படுத்திக் கொள்கிறேன். இந்த ஆத்ம சக்தியைத்தான் எங்கள் குருமார்கள், தங்கள் குருதேவரிடம் இருந்து பெற்றுக்கொண்டதைக் குறுகிய காலகட்டத்தில் கண்டோம்.

''திருமதி பிரதம மந்திரி அவர்களே, நீங்கள் அனுப்பிய கடிதம் எங்களுக்கு மிகுந்த மகிழ்ச்சியை அளித்தது. அதில் ஆஸ்ரம நிர்வாகத்தை உங்களுடைய பிரதிநிதியிடம் அளித்துவிடவேண்டும் என்று எழுதியுள்ளீர்கள். நிர்வாகத்தின் செயல்பாடுகளை மாநில அரசாங்கம் ஏற்றுக் கொள்கிறது என்று குறிப்பிட்டுள்ளதை நாங்கள் முழு மனதுடன் ஏற்றுக் கொள்கிறோம். ஏற்றுக்கொள்வதற்கான காரணம் என்னவெனில் நாங்கள் நிர்வாகம் என்பது, ஸ்ரீ மகா விஷ்ணுவின் பணி என்று பூரணமாக நம்புகிறோம். நீங்கள், ஸ்ரீ மகாவிஷ்ணு தத்துவத்தின் பிரதிநிதியாக இருக்கின்றீர்கள். ஒருவேளை ஸ்ரீ மகாவிஷ்ணு, எங்களைக் காப்பாற்றிக் கொண்டிருக்கும் பொழுதே, அதை முழுமையாக அவரே கையில் எடுத்துக் கொள்ள வேண்டும் என்று எண்ணினால், அதை ஏற்றுக் கொண்டு எங்களுடைய சாவிகளை உங்கள் நிர்வாகத்திடம் அளித்து விடுகிறோம். உங்கள் பிரதிநிதிகள் எப்பொழுது எங்களைக் காண வருகின்றார்கள் என்பதை தயவு செய்து முன்கூட்டியே தெரிவியுங்கள்.

''ஏனெனில், அப்பொழுதுதான் நாங்கள் எங்கள் நிர்வாகம், பாதுகாப்புப் பெட்டகங்கள், செங்கற்கள், கட்டிடங்கள், அறைகள், அதற்குள் இருக்கும் எங்கள் சாமான்கள், மற்றும்

எங்கள் ஆஸ்ரமத்தில் இருக்கும் அனைத்தையும் அவர்களிடம் அளித்துவிட்டு, கோவணங்களை மட்டும் கட்டிக் கொண்டு வெளியேறி விடுகிறோம். நாங்கள் இங்கு வரும்பொழுது எங்களிடம் எதுவும் இருக்கவில்லை. இப்பொழுது வெளியேறும் பொழுதும் எங்களிடம் எதுவும் இருக்காது.

''நீங்கள் எங்களுடைய ஆஸ்ரமத்தின் அனைத்தையும் எடுத்துக் கொள்ளலாம். ஆனால் அதனுடைய ஆன்மாவை அல்ல. இந்த இயக்கத்தின் ஆன்மா என்பதே துறப்பது என்பது தானே. இங்கு வாழ்ந்து கொண்டிருக்கும், தேடுதல் இருப்பவர்கள் ஏற்கனவே இதனை செய்து கொண்டிருக் கின்றனர். நீங்கள் எடுத்துக் கொள்ளப் போவது கட்டிடத்தை யும், கற்களையும் மற்றும் வங்கிக் கணக்குகளை மட்டும்தான். எங்களை அல்ல.

''நீங்கள் வந்து எங்களிடம் சாவிகளைப் பெறும் அக்கணத்தில் வெளியேறி விடுவோம். இங்கிருந்து 100 கிலோ மீட்டர் தொலைவிற்கு நடந்து சென்றால், அங்கு மற்றொரு இயக்கம் தானாகவே தோன்றிவிடும். ஏனெனில் நாங்கள் எந்த இயக்கத்தையும் ஏற்படுத்தியதில்லை. எங்களைச் சுற்றி இயக்கங்கள் தானாகவே தோன்றும். ஏனெனில், எங்களுடைய வேர்கள் ஆன்மீகத்தில் மட்டுமே ஆழமாகப் பதிந்துள்ளன. நீங்கள், உங்கள் பிரதிநிதிகளை அனுப்பும் நாளை எதிர் பார்த்துக் கொண்டிருக்கின்றோம். ஏனெனில் அப்பொழுதுதான் வங்கிகளுடன் ஏற்படுத்தியுள்ள கணக்கு வழக்குகள், காகிதங்கள், பிரச்சனைகள் மற்றும் மக்களைச் சந்திக்கும் அவதியிலிருந்து விடுதலை பெறலாம்.

''நாங்கள் இங்கு வந்ததற்கான முதல் காரணம், எங்கள் ஆன்மாவுடன் இணைவதற்காகத்தான், அதைத் தவிர்த்து விட்டு, தினமும் மற்ற விஷயங்களோடு பேச்சு வார்த்தைகள் நடத்துவதற்காக அல்ல.

''இத்தகைய அருமையான ஒரு சந்தர்ப்பத்தை எங்களுக்கு அளித்து, அதன்மூலம் எங்களுக்குக் கிடைக்கப் பெறும் எங்கள் இயக்கத்திற்கான தெளிவிற்கு மிக்க நன்றி. உங்கள் பிரதிநிதியை

வரவேற்பதற்குத் தயாராக இருக்கிறோம்'' என்று கடிதத்தை சுவாமி கிருஷ்ணானந்தா எழுதியிருந்தார்.

சுவாமி கிருஷ்ணாநந்தாவை அனைவரும் சூழ்ந்து கொண்டு ''இப்படிப்பட்ட கடிதத்தை ஏன் எழுதுகிறீர்கள்?'' என்று கேட்டனர். ஆனால் நான்கு நாட்களுக்குப் பிறகு பாரத பிரதமர் இந்திரா காந்தியின் அந்தரங்க காரியதரிசி சாரதா பிரசாத் அவர்கள் பிரதம மந்திரியின் கடிதத்தோடு ஆஸ்ரமத்திற்கு வந்து விட்டார். ''அது ஒரு பொதுவான கடிதம். ஒரு சில ஆசிரமங்கள் வெளிநாட்டுப் பணம் பெறுகையில் ஒரு சில தவறுகளைச் செய்து வருகின்றன. அவர்களுடைய நிர்வாகத்தில் பல தவறுகள் உள்ளன. சட்டத்திற்குப் புறம்பான வகையில் சொத்துக்களைச் சேர்த்திருக்கின்றனர் என்று உள்துறை அமைச்சகத்திற்கு தெரிய வந்துள்ளது. ஒரு நிர்வாகம் எப்படி நடந்து கொள்ளக் கூடாதோ அப்படி நடந்து கொள்ளும் இயக்கங்களை மட்டும் எடுத்து நடத்தப் போகிறோம். இது நிச்சயமாக உங்களுக்குப் பொருந்தாது. எங்களை மன்னித்து விடுங்கள். நான் எப்பொழுது உங்களை நேரில் சந்திக்கலாம் என்று தயவு செய்து தெரிவிக்கவும்'' என்று அக்கடிதத்தில் எழுதப்பட்டிருந்தது.

சுவாமிஜி பல புத்தகங்களில் கையெழுத்திட்டு சாரதா பிரசாத் மூலமாக பிரதம மந்திரி திருமதி இந்திரா காந்தி அம்மையாருக்கு அனுப்பினார். அதன் பிறகு எந்த அரசாங்கமும் அங்கு தலையிடவில்லை.

எந்த ஆஸ்ரமத்தையும் தொந்தரவு செய்யவில்லை. கிருஷ்ணாநந்தா ஸ்வாமிஜி இக்கடிதத்தைக் கூற, அவருடைய வார்த்தைகளை அப்படியே திரு.ராமஸ்வாமி தட்டச்சு இயந்திரத்தில் ஏற்றினார். நான் அங்குதான் அமர்ந்து கேட்டுக் கொண்டிருந்தேன். யாரையுமே நோகடிக்கத் தெரியாத ஸ்வாமிஜி இப்படிப்பட்ட கடுமையான கடிதத்தை எப்படி எழுத முடிந்தது? பிறகு நான் அவரிடம் ''சுவாமிஜி, உங்களால் இக் கடிதத்தை எப்படி எழுத முடிந்தது?'' என்று கேட்டேன். அதற்கு அவர் ''இந்த நிர்வாகத்தை நான் நடத்துகிறேன் என்று எண்ணுகிறாயா? சுவாமிஜி சிவானந்தா மஹாராஜ் இந்த

பதிலை எழுதும்படி கூறினார். அதனால் நான் இதை எழுதினேன்'' என்று பதில் அளித்தார்.

சுவாமி சிவானந்தா அங்கு இல்லை. ஆனால் இக்கடிதத்தை சுவாமி கிருஷ்ணாநந்தா மஹாராஜின் மனதில் ஏற்றி அதைக் கடிதமாகவும் எழுத வைத்தார்.

இதைத்தான் நாங்கள் அனைவரும் பார்த்தோம். இத்தகைய கடிதத்தை மட்டும் நான் ஞாபகம் கொள்ளவில்லை. மேலும் பல விஷயங்களை ஞாபகம் வைத்திருக்கிறேன். (இந்த ஞாபக சக்திதான் என் வாழ்க்கையில் மிகப் பெரிய தோல்விக்குக் காரணம். அதே சமயத்தில் அது எனக்குக் கிடைத்த மிகப் பெரிய பரிசாகவும் இருக்கிறது). அவர் இந்தக் கடிதத்தில் கூறிய அனைத்தும் எனக்கு மிக நன்றாக ஞாபகம் இருக்கின்றது. இக்கடிதம் அவரிடம் எவ்விதச் சலனத்தையும் ஏற்படுத்தவில்லை. பதிவுத் தபாலில் அனுப்பப்பட்டது. அவர் சிறிதும் கவலைப்படவில்லை. அவர் ''என்ன நினைத்துக் கொண்டிருக்கிறாய்? நாம் கோவணத்தோடு வெளியேறி விடலாம். நமக்கு எதுவும் ஆகாது. நம் வீட்டை விட்டு இங்கு வந்தது இந்த இயக்கத்திற்காகவும், நம்மைச் சுற்றி நிற்கும் மனிதருக்காகவுமா? துறவு என்பது அதுவல்ல. நாம் இந்த உலகிற்கு வந்ததற்கான நோக்கத்துடன் இணைவதுதான் துறவறம். அப்படித்தான் தைரியமாகத் துறவு கொள்ள வேண்டும். ஏனெனில், நீங்கள் அனைத்திற்கும் சொந்தமானவர்கள். எதையும் தூர எறியமாட்டீர்கள். அனைத்து ஞானமும் உங்களுக்குள் புகுந்து, நீங்கள் பரிபூரணமானவராக மாறிவிடுவீர்கள். இதைத்தான் சுவாமி சிவானந்தாஜி நமக்கு கற்றுக் கொடுத்திருக்கிறார்'' என்று கூறினார்.

சுவாமி சிவானந்தா மஹாராஜ் அவர்களை ஒருநாள் நெருங்கிய சீடர் ஒருவர் ஆயுத · கொண்டு தாக்கினார். சுவாமி சிவானந்தா மீது அந்தச் சீடருக்கு கோபம். சுவாமி அவரை ஒருசில விஷயங்களுக்காக அலட்சியப்படுத்தினார். அந்தக் காலகட்டத்தில் மின்சாரம் அங்கு கிடையாது. சுவாமி தயானந்தாஜி ரிஷிகேஷுக்கு மின்சாரத்தை வரவழைத்தார். ஆனால் இச்சம்பவம் அதற்கு முன்னால் நடந்தது.

மெழுகுவர்த்தி வெளிச்சம் மட்டுமே அங்கு இருந்தது. குருதேவர் தன்னை அலட்சியப் படுத்திவிட்டார் எனும் கோபத்தில் இருந்த அந்த மனிதன் அவரை அடித்துவிட்டான். உடனே சுவாமி விஷ்ணுதேவானந்தா, சுவாமி சாந்தானந்தா இருவரும் அந்த மனிதனைப் பிடித்து விட்டனர். ஆனால் குரு தேவர் 'அவனைத் தொடாதீர்கள். இங்கிருந்து அவனை அழைத்துச் சென்று விடுங்கள்' என்று கூறினார். காவல் துறையிலிருந்து வந்து கேட்டபொழுது சுவாமிஜி உடனே ''அவனுக்கு எதிராக கூறுவதற்கு எதுவும் இல்லை'' என்றார். பிறகு தன்னுடைய காரியதரிசியிடம் ''அவனை அவன் வீட்டிற்கு பத்திரமாக அழைத்துச் செல்லுங்கள். அவனுக்கு இப்பணத்தை அளியுங்கள். அவனை விட்டுவிடுங்கள்'' என்றார். அவன் செல்லும் பொழுது அவனிடம் பூ மாலை, பழங்கள் மற்றும் பலவற்றை அளித்து சுவாமிசிவானந்தா மஹாராஜ் வழி அனுப்பினார். ஏழு வருடங்கள் கழிந்த பிறகு யார் குருதேவரை அடித்தானோ, அவன் மீண்டும் திரும்பி ஆசிரமத்திற்கு வந்தான்.

அம்மனிதன் மிகப் பெரிய சந்நியாசியாக மாறி இறைவனடி சேர்ந்தார்.

சுவாமி சிவானந்தாஜீ எதற்காகவும் கலங்கியதில்லை. சிவானந்தா ஆசிரமத்திலேயே தங்கிக் கொண்டு தமக்கு அன்னம் அளிக்கும் அவரைப் பற்றி குற்றம், குறைகள் கூறலாம். இந்த சுதந்திரத்தை அவர் அனைவருக்குமே வழங்கி இருந்தார்.

யார் தன்னைக் குறை கூறுகிறார்களோ அவர்கள் 'தன்னை'க் குறை கூறுவதில்லை என்று அவருக்கு நன்கு தெரியும். குறை கூறுவது என்பதன் மூலம் உங்கள் மனதில் இருக்கும் நச்சுத்தன்மையை வெளியே தள்ளுகின்ற ஒரு நல்ல சந்தர்ப்பத்தை, நீங்கள் உருவாக்குகின்றீர்கள். அந்த நச்சுத்தன்மை வெளி வந்துதானே ஆகவேண்டும்? ஒரு சீடனை நெருக்கமாக ஏற்றுக்கொள்வதற்கு இதுதான் வழியாகும்.

ஒருவர் தீயவர் என்று கூறினால், உங்களுடைய தீய குணம் வெளிப்படுகிறது. அது வெளியே வந்துதான் தீரவேண்டும்.

சிவானந்தா ஆஸ்ரமத்தில் அனைவரும் அமைதியாக இருந்தால் அங்கு அனைவருமே கலங்கி விடுவார்கள். அங்கு மௌனம் என்பது வெடித்துச் சிதறிப் போகும் எரிமலைக்குச் சமமாகும். அது எந்த நேரத்திலும் வெடித்துச் சிதறலாம்.

அங்கு நீங்கள் வந்து, உங்கள் குறைகள் அனைத்தையும் கூறினால் நல்ல வரவேற்பு கிட்டும். யாரும் முழுமையாக நல்லவர்கள் அல்ல. நம் ஒவ்வொருவரிடமும் குற்றம், குறைகள் இருக்கின்றன. அதனால் நாம் இங்கு வந்துள்ளோம். உங்களுடைய குறைகளை வெளிச்சத்திற்குக் கொண்டு வந்து அதனோடு செயலாற்றி நிர்வகிக்க வேண்டும். அப்பொழுது தான், நாங்கள் உங்களை ஒதுக்குவதா அல்லது இணைத்துக் கொள்வதா என்று புரியும். உங்களிடம் உள்ள தவறைப்பற்றி அறியாமல், உங்களிடம் சரியான முறையில் பழக இயலாது.

சரியான முறையில் கைகளைக் குலுக்கி எந்த அளவிற்குப் புன்னகை புரிய வேண்டுமோ, அந்த அளவிற்குப் புன்னகை செய்து வாழ்வது என்பது சரியான வழிமுறையல்ல. நீங்கள் எப்படி இருக்கிறீர்களோ அப்படியே இருங்கள். அதுதான் அங்கு எதிர்பார்க்கப்படுகிறது. அங்கு வரும் ஒவ்வொருவரும், வரும் பொழுதும், திரும்பிச் செல்லும் பொழுதும், ஆஸ்ர மத்திலேயே தங்கும் பொழுதும் சரி, இதைத்தான் நிலை நாட்டுவார்கள்.

எந்தவித மேல் பூச்சும் இன்றி அவர்கள் ஏற்றுக் கொள்ளப்பட்டார்கள்.

சுவாமி சிவானந்தா எக்காரணத்திற்காகவும் தன் சீடர்களில் எவரையும் கண்டித்ததில்லை அல்லது 'வெளியே போ' என்றும் கூறமாட்டார். அவரால் தாங்க இயலாத அளவுக்கு யாராவது நடந்து கொண்டால் அவர் உடனே ''ஓ, ஜி, இந்த 10 ராவணர்களை (100 பேர்) அழைத்து கொண்டு தீர்த்த யாத்திரைக்கு செல்லுங்கள்'' என்று கூறுவார். ''உனக்கு நான் அதிகம் எதையும் கூற இயலாது. நீங்கள் சென்று, பிரார்த்தனைகளை இங்கும், அங்கும் செலுத்திவிட்டுத் திரும்பி வாருங்கள்'' என்பார்.

இந்த முறையில் சுவாமி சிவானந்தா அவர்களை வெளியே அனுப்புவாரேயின்றி ''வெளியே போ'' என்று கூறமாட்டார் அவர். ''தீர்த்த யாத்திரைக்குச் செல்'' என்று மட்டுமே கூறுவார். நீங்கள் யாரையும் வெளியேற்ற முடியாது, யாரையும் ஏற்றுக் கொள்ளவும் முடியாது, ஏனெனில் ஓர் உடம்பு தன்னைப் பார்த்து, ''எனக்கு வலது கண் பிடிக்காது. என்னால் இடது கண்ணிடம் மட்டுமே அன்பு செலுத்த இயலும். எனக்கு கால் விரல்கள் மீது தான் அன்பு, கைவிரல்களைப் பிடிக்காது'' என்று கூற இயலாது. உடம்பு என்பது முழுமையாக இணைந்தது. அதில் எதை விடுப்பது? இதை சுவாமி சிவானந்தா மஹராஜும் அவருடைய சீடர்களும் நடத்திக் காட்டினர்.

அவர் நம்மை விட்டுப் பிரிந்திருக்கலாம். ஆனால் அவரைப் பற்றி யோசித்த உடனேயே, அவரைப் பற்றி நாம் படிக்கையில் அவர் நம்முடன் இருக்கின்றார்.அவர் ரிஷிகேஷில் உட்கார்ந்து கொண்டு அமெரிக்க நாட்டில் லாஸ் ஏஞ்சல்ஸ் நகரில் மைல்கள் கணக்கில் தள்ளி இருப்பவர்களின் உடல் நிலையைச் சரி செய்துள்ளார்.

பெயர் தெரியாத ஒருவர் வந்து கதவைத் தட்டி சுவாமி கிருஷ்ணானந்தாஜி மஹராஜிடம் ''எனக்கு இந்த முதுகுத்தண்டு வலி இருந்தது. நான் பல சிகிச்சை முறைகளுக்கு சென்றேன். ஆனால் யாரோ ஒருவர் ஒரு நீண்ட அங்கியை அணிந்து என்னருகில் வந்து நின்றார். அவர் யாரென்று எனக்குத் தெரியாது. என் உடலை அவர் தொடுவதைக் கனவில் கண்டேன். என் வலி பறந்தோடி விட்டது. மருத்துவர் இனி எனக்கு அறுவை சிகிச்சை தேவையில்லை என்றார். எவ்வித சிகிச்சையும் தேவையில்லை என்றார். வந்த அந்த மனிதர் யாரென்று எனக்குத் தெரியாது. அதனால் இங்குள்ள இந்திய தூதரகத்தில் கேட்டேன். அவர்கள் சுவாமி சிவானந்தாவின் முகவரியை அளித்தனர். இதோ இங்கு வந்து விட்டேன்'' என்று கூறியதுண்டு. இப்படிப் பலர் வந்ததுண்டு.

'பெல்' மின்சாரத் தொழிற்சாலை (BHEL Electrical Factory)க்கு மிக உயர்ந்த பதவியில் உள்ள ஒரு ரஷிய நாட்டு

அதிபர் வந்தார். ஆஸ்ரமத்தில் இருந்து இருபத்தியாறு கி.மீ. தொலைவில் உள்ள ராணிபூர் எனும் இடத்தில் (இது ஹரித்வாரில் உள்ளது.) தொழிற்சாலை இருந்தது. தூதரகத்தி லிருந்து ஆஸ்ரமத்திற்கு ஒரு மொழி பெயர்ப்பாளருடன் வந்தார். சுவாமி கிருஷ்ணானந்தாஜியுடன் பேசிக் கொண்டிருந்தார்.

''நீங்கள் எப்படி யோகப் பயிற்சி செய்கின்றீர்கள்? எங்கள் கம்யூனிஸக் கொள்கையினால் எனக்கு யோகப் பயிற்சி பற்றி பிரச்சனை உள்ளது. ஆனால் யோகப் பயிற்சியின் உயர்வுகளைப் பற்றிக் கேட்டிருக்கின்றேன். யோகாவைப் பற்றிக் கூற 'க்ரெம்லின்' நாட்டிற்கு யாரையாவது அனுப்ப இயலுமா? அவர் ஆஸ்ரமத்தில் இருந்து வந்திருக்கிறார் என்று நாங்கள் யாரிடமும் கூற மாட்டோம். அது ஓர் உடற் பயிற்சி என்று கூறி சமாளித்து விடுவோம். நீங்கள் இத்திட்டத்திற்கு ஒப்புக் கொள்கிறீர்களா?'' என்று வினவினார்.

சுவாமி கிருஷ்ணானந்தாஜி உடனே ''அதற்கு என்று நிறையப் பேர் உள்ளனர். நாங்கள் யாரையும் அனுப்புவ தில்லை'' என்று கூறிவிட்டார்.

அந்த ரஷிய நாட்டு அதிபர் கிளம்பி விட்டார். பிறகு அவர் ஒரு குழந்தையின் புகைப் படத்தை அனுப்பினார். அதில் ஒரு சிறு குழந்தை பெரிதாக வீங்கிய தலையுடன் இருந்தது. அவர்கள் அனுப்பிய கடிதத்தில் ''யோகிகள் உடல்நிலை பாதிப்புகளை நீக்கி விடுவார்கள் என்று நாங்கள் அறிவோம். இது ஒரு கம்யூனிச நாடென்பதால் உங்களுடைய மிக உயர்ந்த மதிப்புகளுக்கு ஏற்ற மரியாதையை நாங்கள் அளிக்க இயலாது. ஆனால் இந்திய யோகிகளான நீங்கள் இக்குழந்தைக்கு ஏதாவது செய்ய இயலுமா?'' என்று கேட்டிருந்தார்.

அந்தப் புகைப்படம் சமாதி மந்திரில் வைக்கப்பட்டு 48 நாட்கள் தொடர்ந்து ஜபம், பூஜைகள் செய்யப்பட்டன. மஹா மிருத்யுஞ்ஜெய யாகம் நடத்தி அனைத்து நாட்களிலும் பிரார்த்தனை செய்யப்பட்டது. பிறகு பிரசாதங்கள் அனுப்பி வைக்கப் பட்டன.

வீக்கம் குறைந்தது, குழந்தை நன்றாகத் தேறியதும் பெற்றோர் ஆஸ்ரமத்திற்கு வந்தனர். அவர்களுக்கு ஆங்கிலத்

தில் ஒரு வார்த்தைகூடப் பேச இயலவில்லை. ரஷிய தூதரகத்தி லிருந்து மொழி பெயர்ப்பாளர் கூடவே வந்திருந்தார். ஆஸ்ரமத்தில் தங்கிய அவர்கள் ''நீங்கள் என்ன சொல்கிறீர்கள் என்று எங்களுக்குத் தெரியாது. நாம ஜபம் என்ன என்று எங்களுக்குப் புரியவில்லை. ஆனால் இங்கு எங்களுக்கு மிகுந்த நிம்மதி கிடைக்கின்றது'' என்று கூறினர்.

எங்களோடு அவர்களால் பேசவே இயலவில்லை. ஏனெனில் எங்களில் யாருக்கும் ரஷிய மொழி தெரியாது. அவர்களுக்கு என்று ஒரு மொழி பெயர்ப்பாளர் இருந்தாலும், அவர்களுடன் உரையாடுவது மிக கஷ்டமாக இருந்தது. அவர்கள் அரசாங்கம் அவர்களை அதிகம் பேச அனுமதிக்க வில்லை. எந்த விஷயத்தைக் கூறினாலும் அது தணிக்கை செய்யப்பட்டே மொழி பெயர்க்கப்பட்டது. அதனால் அவர்கள் பேசியதில் பாதிதான் எங்களுக்குத் தெரிவிக்கப் பட்டது.

ஆனால் அவர்கள் ஆஸ்ரமத்தை விட்டுச் செல்கையில் மிகுந்த மனநிம்மதியுடன் சென்றனர்.

அருகில் இருந்து கவனித்த என்னைப் போன்றவர்களுக்கு, சூழ்நிலையைப் புரிந்து கொள்ள முடிந்தது. இந்த டிவைன் லைஃப் சொஸைட்டியின் பிரம்மாண்டத்தை உணர முடிந்தது. சுவாமி சிவானந்தாஜியின் கண்களுக்குப் புலப்படாத தோற்றத்தினையும் உணர முடிந்தது.

எந்தச் சீடரும் எவ்வித அதிசயத்தையும் நிகழ்த்தவில்லை. இதுதான் துறவறத்தின் விசேஷம். அதைப் பயிற்சி செய்யும் பணியைத்தான் அவர் பின்பற்றினார். அவருடைய எளிமைக்கு இது ஓர் எடுத்துக்காட்டு. எல்லாவற்றையும் ஏற்றுக் கொண்டு, அதே சமயம் அதில் ஈடுபடாமல், நீங்கள் செய்ததற்காக மகிழ்ச்சி கொள்ளலாம். அதே சமயம் நீங்கள் செய்யாததற்கு வருத்தப்படாமல் அத்தனை சீடர்களிடமும் அவரால் இருக்க முடிந்தது.

சுவாமி நிஜபோதா மிகக் கடுமையாக உழைப்பவர். சுவாமி கிருஷ்ணானந்தா மஹராஜைவிடக் கடுமையாக உழைப்பவர். அவர் காசியில் இறந்து விட்டார். நிஜபோதா

இல்லாமல் சுவாமி சிவானந்தா எந்தப் பணியையும் செய்ததில்லை. சுவாமிஜியின் அனைத்துப் பணிகளுக்கும் நிஜபோதா ஊக்கு சக்தியாக இருந்தார்.

ஆனால் காசியில் அவர் இறந்து விட்டார் எனும் செய்தி எட்டியவுடன் சுவாமி சிவானந்தாவிடம் எவ்வித மாற்றமும் தெரியவில்லை. நிஜ போதா போன்ற ஒரு உழைப்பாளியை இழந்துவிட்ட கவலையும் அவரிடம் காணப்படவில்லை. அவரிடம் ஒரு பெரிய நிம்மதி தெரிந்தது. நிஜபோதா அங்கு இருக்கும் பொழுது எவ்விதக் கபடநாடகமுமில்லை. அதே சமயம் அவர் இறந்த பொழுது எவ்வித நஷ்டமும் அங்கு தென்படவில்லை.

உங்களிடம் நீங்களே எதைத் தொலைக்க முடியும்? அன்று நடப்பதை அப்படியே தனக்குள் ஏற்றுக் கொள்ளும் சக்தி மட்டும் அங்கு தென்பட்டது.

அவர் மிகப் பெரிய குரு. அவரைப் பெற நாம் மிகவும் கொடுத்து வைத்திருக்கின்றோம். அவருடைய ஆசிகளால்தான் இங்கு வந்து அவரைப் பற்றிப் பேசவும், கேட்கவும் முடிகின்றது. கேப் டவுனில் நாம் எத்தனை பேர் இருக்கின்றோம்? ஆனந்த குடீரில் நாம் எத்தனை பக்தர்கள் இருக்கிறோம்? சுவாமி வெங்கடேசானாந்தாவின் சீடர்கள் எத்தனை பேர் உள்ளோம்? ஏன் வெகு சிலரே இங்கிருக்கின்றோம்?

இன்று மாலை, அவருடைய பேரானந்தமான சந்நிதானத்தில் நாம் மகிழ்ச்சியுடன் இருக்க வேண்டும் என்று குருதேவர் ஆசீர்வதித்துள்ளார்.

நாம் நம் பெற்றோர்கள், நம் சமூகம், நம் வளர்ப்பு, இதுவரை நாம் பெற்றிருக்கும் சமமான மனநிலை ஆகியவற்றிற்குக் கடன்பட்டிருக்கின்றோம்.

இன்றும் குருதேவர் நம்மை ஆசீர்வதித்துக் கொண்டிருக்கின்றார். இந்த அருமையான நிகழ்ச்சியினால் நாம் மேலும் சிறந்தவர்களாக மாறி இந்த ஆனந்த குடீர் ஆஸ்ரமத்தை விட்டுச் செல்கையில் சுவாமி சிவானந்தா மஹராஜ் அவர்களின் எண்ணங்கள் நம்மில் பொங்கட்டும்!

---

# ஸ்ரீ குருகீதை சாரம்ஸம்

## (ஸ்கந்த புராணம் - ப்ரஹ்ம சம்ஹிதை)

(குரு என்பவர் சாதாரண மனிதர் அல்லர், அவரே இறைவன் என்ற எண்ணம் கொள்ள வேண்டும். கீழ்வரும் ஸ்லோகங்கள் வேத நூல்களின் அடிப்படையில் உள்ளவை. இவை குருநாதர் என்பவரின் உயர்வைக் கூறுகின்றன.)

குரு என்பவர் பிரம்மா, விஷ்ணு மற்றும் மகேஸ்வரன் ஆவார். அவரே பிரம்மம். ஜீவாத்மாவை உணர வைப்பவர். தன்னைத்தானே உணர வைப்பவர் குரு. குருதான் தந்தை, தாய் மற்றும் இறைவன் ஆவார்.

'கு' ஏன்றால் இருட்டு 'ரு' என்றால் நீக்குவது. அஞ்ஞானத்தை அகற்றி ஞானம் அளிப்பவர் அவரே.

எண்ணம், செயல், வார்த்தைகள் மூலமாக குருவை வந்தனம் செய்ய வேண்டும். சாஷ்டாங்க நமஸ்காரம் - கைகள், கால்கள், முழங்கால், மார்பு, தலை, கண்கள், மனம் மற்றும் வாக்கு கொண்டு நமஸ்கரிக்க வேண்டும்.

குருவைவிடப் பேருண்மை, குருவை விட பூஜை, குருவை விட ஞானம் வேறெதுவுமில்லை.

பிரபஞ்சம் குருவிடம் உள்ளது. குரு பிரபஞ்சத்தில் உள்ளார். குருவே பிரபஞ்சம். குருவுக்கு வந்தனம்.

உடலால், மற்றவர்களால், இறைவனின் சக்தியால் மனதால் துன்பப்படுபவர்களுக்கு குருதான் கங்கை நீர். குருநாதரின் உருவம் தியானத்திற்கு; அவருடைய பாதங்கள் பூஜிப்பதற்கு. அவருடைய வார்த்தைகள்தான் மந்திரம், அவருடைய ஆசிகள்தான் விடுதலை. அஞ்ஞானம் எனும் பாம்பு எம்மைத் துன்புறுத்துகையில் ஞானமளிக்கும் நீரே எம் குரு.

## பிரார்த்தனை!

ஓம் ஹ்ரீம் சிவானந்தா
ஹம்ஸா வித்மஹே
பரம ஹம்ஸாய தீமஹி
தன்னோ ஹம்ஸ ப்ரசோதயாத் (மூன்று முறை ஜபிக்கவும்)
ஓம் நமோ பகவதே சிவானந்தாய

# புத்தகத்தைப் பற்றி:

தென்னாட்டிலிருந்து எங்கள் வடநாட்டிற்கு ஒரு குளிர் காலத்தில் 2009-ஆம் ஆண்டு வந்தார். குரு பூர்ணிமா மற்றும் சத்குரு சுவாமி சிவானந்தாவின் மஹாசமாதியன்று மிக அருமையான பேச்சுகளை அளித்தார்.

நீங்கள் உண்மையான ஆன்மீகத் தேடுதல் கொண்டவராக இருந்தால், யோகக்கலையை பற்றி அறிய வேண்டும் என்றால் இவற்றைப் படிக்கவும். இது ஒரு கதை அல்லது நாவல் அல்ல. உண்மையான தேடுதல் உள்ளவருக்காக எழுதப்பட்டது.

சுவாமி வித்யானந்தாஜிக்கு இப்புத்தகத்தை இணைத்து தொகுத்து அளித்தமைக்கு நன்றி. இதைத் தொகுத்து எழுதியவர்களுக்கு நன்றி. அனைத்திற்கும் மேலாக சுவாமி முருகானந்தா அவர்களே, உங்கள் ஞானம், நகைச்சுவை மற்றும் அறிவை எங்களுடன் பகிர்ந்து கொண்டதற்கு மிக்க நன்றி.

மாதா யோகேஸ்வரி
ஆனந்த குடீர் ஆஸ்ரமம்
கேப்-டவுன்

ஆச்சரியகரமான, தொடர்ந்து வரும் விஷயமாக, எல்லையற்ற அன்பு மற்றும் கருணையை தன் சீடனுக்கு அளிப்பதை சுவாமிஜி நம் முன்னால் காண்பிக்கும் சுவாமிஜி பேசிய பேச்சு குரு பூர்ணிமா தினம் அன்றும் ஸ்ரீகுருதேவ சிவானந்த மஹராஜ் அவர்களின் மஹாசமாதி அன்றும் பேசுகின்றது.

சுவாமி பார்வதியானந்தா
ஆனந்த குடீர் ஆஸ்ரமம்
கேப்-டவுன்

ஜானகி மற்றும் சமாந்தா பிரைசு மற்றும் சுவாமி வித்யானந்தாஜி அவர்கள் இப்புத்தகத்திற்கு உதவியதற்கு நன்றி. ஸ்ரீ குருதேவர் தன் ஆசிகளை இவர்கள் மீது பொழியட்டும்.

ஹரி ஓம்.
சுவாமி ஹிரண்யகர்பாநந்தா
அருணாசல உன்னத மலை அறக்கட்டளை
திருவண்ணாமலை

முதலில் இறைவன்
அடுத்தது உலகம்
கடைசியில் நீ

*குருதேவ் சிவானந்தா*



இமயஜோதியின் இமயப்பார்வை



இமயஜோதி சற்குரு தேவருடன்
ஆன்மிக ஜோதி மாதா ஆனந்தமயி



சுவாமி தயானந்த சரஸ்வதியுடன் நூலாசிரியர்



திருமதி எம்.எஸ். சுப்புலக்ஷ்மி அம்மாவுடன் நூலாசிரியர்

'சுவாமி சிவானந்தாஜியுடன்
பணிபுரிவது என்பது
மிகக் கடினமானது..
அது அவர் இடும் கட்டளைகளினால் அல்ல..
கட்டளைகளைப் பிறப்பிக்காமல்
அவர் இருப்பதினால்தான்...'

– சுவாமி கிருஷ்ணானந்தாஜி மகராஜ் கூறியது.



*Serve. Love. Give. Purify*
*Meditate. Realise*
*Sivananda*

– சுவாமி முருகானந்த சரஸ்வதி

வானதி பதிப்பகம் 